




உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்.



# இளசைப்புராண வசனம்.



திருக்கைலாயபரம்பரைத்

திருவண்ணாமலையாதீனத்து

வித்வான்

ப்ரம்மஸ்ரீ

கணேசபண்டிதரவர்கள்

செய்தது.

---

இஃது

இளையாற்றங்குடி நகரத்தாரால்

சென்னை:

இந்து தியலாஜிகல் யந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

மன்மத௵ சித்திரை௴.





# முகவுரை.

பரமாசாரிய மூர்த்தியாகிய பரமசிவன் நந்திதேவருக் கருளிச்செய்ய; அவர் சனற்குமார முனிவருக் கருளிச்செய்ய; அவர் வியாசமுனிவருக் கருளிச்செய்ய ; அவர் சூதமுனிவருக் கருளிச்செய்ய; அவர் நைமிசாரணிய வாசிகளாகிய சௌனகாதிமுனிவர்களுக் கருளிச்செய்த புராணங்கள் பதினெட்டு. அவற்றுள், சிவபுராணங்கள் பத்து. அப்பத்தினுள், பிரமாண்ட புராணமொன்று. அப்புராணத்துள், இளைசை மான்மியஞ் சொல்லப்பட்டுள்ளது. அந்த மான்மியமானது பன்னிரண்டத்தியாயங்களை யுடையதாயிருக்கும். இளையாற்றங்குடி நகரத்தாரும் அவர்களாசாரியவரும் அவ்வடமொழி மான்மியத்தைத் தமிழ் கற்றோருக்கு உபயோகமாகும் பொருட்டு மொழிபெயர்த்துச் செய்யுள் வடிவினதாக நூலியற்றித் தரல்வேண்டுமென்றமையால், அதனை அவ்வாறு முன்னியற்றினேன். பின்பு அவர்களே கற்றோரும் மற்றோருமாகிய யாவருக்கு முபயோகமாகும் பொருட்டு வசனவடிவாக்கித் தரல்வேண்டுமென்றமையால், அவ்விளைசைப்புராணத்தில், வடநூலின் வேறாக இயற்றிய பாயிரம், திருநாட்டுப்படலம், திருநகரப்படலம் என்னும் மூன்றையு மொழித்து, பன்னிரண்டு படலங்களையும் வர்ணனுபாகம் நீக்கி எளிதான நடைபெற வசனமாகச் செய்தேன்.

இங்ஙனம்,

க. ப.

உ

திருச்சிற்றம்பலம்.

# நைமிசைப்புராணவசனம்.

காப்பு.

சிவமெனும்பொருட்டாய்மூன்றுதிகழெழுத்துடைத்தாய்நின்ற
வுவமையில்பிரணவத்தையுலகெலாந்தெளியவாங்கே
கவள்மாபூதந்தேவுகலந்ததோருருவங்கொண்டு
நவமுற்றவதித்தமுன்னோனற்பதம்போற்றிவாழ்வாம்.

முதலாவது

## புராணவரலாற்றுப்படலம்.

புண்ணியபூமியாகிய பரதகண்டத்திலே கங்காகோமதி நதிக்கரையிலே சிறந்து விளங்குவதும், தவஞ்செய்யும்பொருட்டு ஒரு வனத்தை நியமித்துத்தரல்வேண்டுமென்று பிரார்த்தித்த முனிவர்களுக்கு இந்தச் சக்கரமோய்ந்தவிடமே யுங்களுக்குத் தபோவனமென்றுசொல்லிப் பிரமதேவர் ஒரு தருப்பையைச் சக்கரமாக்கியுருட்டிவிட அதுவந்து ஓய்ந்தகாரணத்தாற்பெயர்பெ

றதும், தண்டகாரணிய முதலிய எல்லாவனங்களினு முத்தமமானதும், பிரமசரியம் கிருகஸ்தம் வானப்பிரஸ்தம் சந்நியாசமென்னும் நான்குநிலைகளினிற்போராகிய முனிவர்குழாங்கள் நிறைந்த பன்னசாலைகளையுடையதும், வேதவோசையும் ஆகமவோசையும் மிருதிகளோசையும் புராணவோசையும் இடையறாது நிறைவதும், சமிதாதானம் ஔபாசனம் அக்கினிகோத்திரம் முதலிய கருமங்கள் பிரகாசிப்பதும், எண்ணில்லாத வற்புதமுடையதுமாகிய நைமிசாரணியத்திலேசைவாகமம் வல்லவர்களாய் மிக்கவிரதமுடையவர்களாய் விளங்கிய முனிவர்கள், பலருங்கூடிப் பலவகைத் தருமரூபமாய் நெடுங்காலஞ் செய்யப்படுவதாகிய ஒரு சத்திரயாகத்தை வேதகோஷத்தோடு செய்வாராயினர்கள். அப்பொழுது சொல்லுதற்கரிய மகிமையும் அளவிலாத் தேசுமுடைய சூதமகாமுனிவனை அன்போடு வழிபட்டு அவனைப்பார்த்து இவ்வாறு வினவுகின்றார்கள். திருவருளே யுருவமாகக்கொண்ட முனிவரே, தேவரீரருளிச்செய்த சிவபெருமானுடைய கதையாகிய அமிர்தத்தை நாங்கள் பருகியுந் தெவிட்டுதலடைந்திலோம். இன்னும் பாவங்களைப்போக்குகின்ற அவருடைய புண்ணியகதையை யன்போடு சொல்லியருளும். நற்கதை கேட்கும் நன்மையினாலன்றோ அற்புதமாகிய சித்தவைராக்கியமும், மகத்தாகிய திவ்வியஞானமும், புண்ணியங்களுள் விசேஷமுடையதாகிய சிவபத்தியுமுண்டாமென்று சொன்னார்கள். கருணை ரசத்துக்கு நிதியாகிய சூத

மகாயோகியானவர், அதனைக்கேட்டுமகிழ்ந்து, யாவையு மறிந்தவரும் ஒப்பில்லாதவரும் தமதுகுருவுமாகிய வியாசமுனிவரை இருதயகமலத்திலே தியானஞ்செய்துகொண்டு, காமம்முதலிய முக்குற்றங்களையுங் கடந்த முனிவர்களுடைய மனமாகிய தாமரைகளை மலரச்செய்யுஞ் சூரியனாய் அன்போடு இவ்வாறு சொல்லியருளுவார். தவறாத பெருந்தவமுடைய முனிவர்களே, தேவதேவராகிய சிவபெருமானுடைய கதையைக் கேட்க விரும்புகின்ற நீங்களே இப்பூவுலகத்திற் பெருஞ்செல்வமுடையீர்கள். அதனையாஞ் சொல்லுகின்றோம். அன்பியலோடு கேளுங்கள். சகல சாஸ்திரங்களிலும் எவ்விடத்தும் இரகசியமா யிருப்பது: இளைசைமாநகரமாம். அது மிகுந்த விசேஷமுடையது; உலகத்திலுள்ள ஸ்தலங்களுள் உத்தமமானது; எவ்வகைப் பாவங்களையும் எவ்வகைப் பாதகங்களையும் போக்கவல்லது. முனிவர்களே, அந்தஸ்தலத்தின் உவமையில்லாத மான்மியத்தைத் தெரியும்படி யுங்களுக்குச் சொல்லுவோம். எல்லாத்தருமங்களையும் அறிவிக்கின்ற இந்தப் புராணமானது, கேட்பவர்களுக்கு எக்காலத்தினும் எவ்வகைப் பாவ வலிமையையும் நீக்கும்; இம்மை மறுமை யாகிய இருமைப்பயன்களையுங் கொடுக்கும்; உவமையில்லாத சௌபாக்கியமுந் தரும். முற்காலத்திலே அகத்தியமுனிவர் விரும்பித் தம்மையுணர்ந்த வசிட்டர்முதலிய முனிவர்களுக்கு அருளிச்செய்த புராதனவனமான்மியமானது, வேதாந்தமாகிய உபநிஷத்துக்களிலே

டர்முதலிய முனிவரர்களைநோக்கி, இதனைக்கூறியருளு வார். வினைவலியில்லாதவர்களே, நீங்களிப்பொழுது வி னவியவினு மிகமேன்மையையுடையது. அதற்குவிடை தந்து சொல்லுவோம். சாவதானத்தோடு கேளுங்களெ ன்று சொல்லியருளி, பின்புஉள்ளத்தை யொருவழிப்ப டுத்தி, துன்பத்தை யகற்றுகின்ற விசுவநாதக்கடவுளை யும், தம்முடைய குருவாகிய ஆறுமுகக் கடவுளையுந் தியானித்து, பின்னர் இளசைமாநகரத்தி லெழுந்தரு ளியிருக்கின்ற கைலாசநாத ஸ்வாமியையும், சந்திரன் போன்ற திருமுகத்தாற் பாசவலையை யகற்றி மங்கலம் பொழிகின்ற நித்தியகல்யாணி யம்மையையும், அடியா ர்களுடைய ஆபத்தைக் கெடுக்கவல்ல வடுகநாதரையும் வணங்கி, மந்திரங்களுக்கெல்லா மாதியாகிய ஸ்ரீபஞ்சா க்ஷரத்தைச் செபித்து, திருவருட்கடலிலே மூழ்கி யெ ழுந்து, முனிவர்களைப் பார்த்து, உலகமெல்லா முய்ய வருளிச்செய்வார். முற்காலத்திலே திருக்கைலாசத்தி லுள்ள திருக்கோயிலிற் செந்தாமரையாசனராகிய பிரம தேவர் நாரதமுனிவருக்கு இதனை விரித்துச்சொல்லிய ருளினரென்று அருளிச்செய்ய; அதைக்கேட்ட முனி வர்கள், சிவகதைகேட்கும் விருப்பமிகுதியால், அவரை நோக்கி, பிரமதேவர் எவ்வாறு விரித்துச் சொல்லியரு ளினர்? அதனைக் கூறியருளுகவென்று விண்ணப்பஞ் செய்ய, அகத்தியமுனிவர் சொல்லியருளுவாராயினர்.

முன்னொருகாலத்திலே, வேதங்களும் பல சாஸ்தி ரங்களும் எண்ணில்லாத வுயிர்களும் பலகாலஞ்செய்த

## இரண்டாவது.

# தலவிசேடமுந் தீர்த்தவிசேடத்திற்சுபத்திரன் கதையு முரைத்த படலம்.

---

ஒருமைப்பட்ட மனத்தினுண்மையையுடைய முனிவர்களே, பூமியிற் கைலாசமென்று புகழப்படுந் தலைமையையுடைய இளையாற்றங்குடி யென்னும் ஸ்தலத்தினுடைய மகிமையை யாவருந் தெரிந்து கொள்ளும் வண்ணஞ் சொல்லுகின்றோம்.

எந்தப் புவனங்களினும் புண்ணியக்ஷேத்திரங்கள் எப்பொழுது இல்லையோ அப்பொழுதே இளையாற்றங்குடி யென்னும் ஸ்தலத்தை உயிர்களுக்கு இன்பஞ் செய்பவராகிய சிவபெருமான் நிருமித்தருளினர். ஆதலால் அந்தஸ்தலத்தின் மேன்மையை யெல்லாம் சந்தேக விபரீதங்களின்றி யறியத்தக்கவர் யாரிருக்கின்றார்கள்? உமாதேவி பாகராகிய சிவபெருமானே யறிவார். கிருதயுகத்திலே ஞானமும், திரேதா யுகத்திலே யாகமும், துவாபரயுகத்திலுங் கலியுகத்திலுந் தானமும் முத்தியைக் கொடுக்குமென்றும், இந்த நான்கு யுகங்களிலுஞ் சிவபூசை யொன்றே முத்தியைக் கொடுக்குமென்றும் அறிவிற் சிறந்த பெரியோர்கள் சொல்லுவார்கள். தீமைகளை நீக்கி யின்பத்தைக் கொடுக்கவல்ல சிவலிங்க பூசையும் பலநாட்கழிந்தபின்பே முத்தியைக்

கொடுக்குமென்பார்கள். அவ்வகைத்தாகிய சிவபூசையானது அந்தஸ்தலத்திலே அரும்பயனை விரைவிற்கொடுக்கும். அந்தஸ்தலத்தின் பெருமை சொல்ல வெளிதோ? மனிதர்கள் யாவரேனும் இளையாற்றங்குடி யென்று கேட்பார்களாயின் அவர்கள் தருமத்தை யடைவார்கள். இளையாற்றங்குடி யென்று நினைப்பார்களாயிற் பொருளடைவார்கள். இளையாற்றங்குடியைத் தரிசிப்பார்களாயின் இன்பமடைவார்கள். இளையாற்றங்குடியில் இடையறுது வசிப்பார்களாயிற் சிவபெருமானுடைய திருவடியடைந்து வாழ்வார்கள். காசிமுதலாகிய புண்ணிய க்ஷேத்திரங்களிலே உடன்முடிவிலே முத்தியை யடைவார்கள். இளைசையம்பதியில் மூன்றுதினம் வசித்தால் அந்த முத்தியை யடைவார்கள். அந்தஸ்தலமானது, மகா பாதகமென்னும் பஞ்சுக்குச் சுழல்காற்றுயுள்ளது. ஆதலால் முன்னைவினைகளைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு யாவரும் அந்தஸ்தலத்தையடைதல் வேண்டும். அறியாமையினுலேனும், மயக்கத்தினுலேனும், தெய்வவசத்தாலேனும், அந்த ஸ்தலத்துள் வந்து புகுந்தாலும் அவர்கள் பாவமெல்லாங் கெடுவது உண்மை. எறும்புமுதலானவையுமுள்ள வுயிர்களெல்லாம் இளைசையம்பதியிலே முத்தியடைந்துய்கின்றன. ஆதலால் அந்தஸ்தலத்துக்கு நிகரான ஸ்தலம் மூன்றுலகத்தினு மில்லையில்லை. எல்லோருக்கும் போகம் மோக்ஷமென்னு மிவைகளைத் தந்தருளும் பொருட்டுச் சிவபெருமானமைத்தருளிய அந்தஸ்தலமானது,

## தலவிசேடமுந் தீர்த்தவிசேடத்திற் சுபத்திரன் கதையுமுரைத்த படலம்.

விஷ்ணு பிரமா முதலிய சகல தேவர்களும் சகல சித்தியின் பொருட்டும் வழிபட்டுள்ளது. அந்தஸ்தலமானது, நினைத்த மாத்திரத்திலே மகாபாவங்களை நீக்குவது; உயர்வாகிய போகத்தையும் மோக்ஷத்தையும்கொடுப்பது; அந்தஸ்தலத்திலே என்றும்வசிக்கின்ற சகல பிராணிகளுக்கும் திரும்பவும் பூமியில் வந்து மலத்தினாலே மூடுண்ட வுடலினோடுழலுகின்ற பிறவியச்சமில்லை. இதனை யாராயப்போகவும் வேண்டாம். தத்துவத்தலை கடந்த சிவபெருமான் வீற்றிருக்கின்ற ஸ்தலங்களுள் உத்தமமாகிய புராதனவனத்தின் மகிமையை யார்சொல்லவல்லவர்கள்? யாரேனும் பொறிகளை யடக்கி மனத்தை யொருவழிப்படுத்திக் கொண்டு அந்தஸ்தலத்தில் வசிப்பாராயின் அவர்கள் மூன்று பொழுது முண்டிருந்தாலுங் காற்றையுண்டிருப்பவரை யொப்பார்கள். அந்தஸ்தலத்திலே அரிசி முதலியன ஒரு பிடியளவு கொடுக்கில் அது மகா தானஞ்செய்த பலனை யடைவிக்கும். முனிவர்களே, பலவாறெடுத்துச் சொல்லுவதென்னை? சித்தபுரமானது, காசி முதலிய புண்ணியக்ஷேத்திரங்களினும் உத்தமோத்தமமாகும். அந்தஸ்தலத்தின்றிருநாமங்கள், சிவபுரமென்றும், பூகைலாசமென்றும், சகலகாமப்பிர பூரணபுர மென்றும், சித்தபுர மென்றும், புராதனவனமென்றும், நித்தியகலியாண புரமென்றும் சிரமாபனோதனபுரம் (இளையாற்றங்குடி) என்றும்சொல்லப்படுவன. இவைகளேயன்றி அறிவுடையோர்சொல்

லுந்திருநாமங்கள் இன்னும் அளவில்லாதவையுள்ளன.
இப்படிப்பட்ட மகிமையையுடைமையால் இளைசையெ
ன்னும் ஸ்தலமே எல்லாஸ்தலங்களுக்கும் முன்னைய
தாய் உத்தமத்தினுத்தமமா யிருக்கும். முனிவர்களே
இந்த விஷயத்தில் ஐயமில்லை. அதனை நன்றாயறிந்துகொ
ள்ளுங்களென்று அகத்தியமுனிவர் சொல்லியருளினார்.
முனிவர்களெல்லாம் ஸ்தலவிசேஷத்தைக்கேட்டு மிகு
ந்த வாச்சரியமுடையவர்களாய் அகத்திய முனிவரை
நோக்கி இவ்வாறு விண்ணப்பஞ் செய்கின்றார்கள். ஸ்
தலவிசேஷங்கண் முழுது முணர்ந்த பெருந்தவ முனி
வரே, இளைசைமாநகரத்தின் வைபவத்தைக் கேட்டு
நாங்களெல்லாம் நன்மை பெற்றோம். இனிச் சித்ததீர
த்த மான்மியத்தைக் கருணையினு லருளிச்செய்க வெ
ன்று விண்ணப்பஞ் செய்ய; அதுகேட்ட அகத்தியமு
னிவர் இவ்வாறு சொல்லியருளுகின்றார். கேட்டமா
த்திரத்தே பெரும்பாவம் போக்குவதாய் மிகமேலான
தாயுள்ள சித்ததீர்த்தத்தின் மான்மியத்தை அதனுற்
பத்தியோடு சொல்லுவோம். குற்றந்தீர்ந்த முனிபுங்
கவர்களே, மனத்தை யொருப்படுத்திக் கேளுங்கள்.
எப்பொழுது இவ்வுலகத்தின் கண்ணே தீர்த்தங்களில்
லையோ அப்பொழுது கைலாசநாதர் எப்பொருளையுங்
கொடுக்கவல்ல ஒரு தீர்த்தத்தை யங்கே யமைத்தரு
ளினர். அந்தத்தீர்த்தஞ் சிவதீர்த்த மென்னும் பெயர்
பெற்றது. அது துன்பங்களைப் போக்குவது; மேன்
மையுடையது. அந்தத்தீர்த்தத்தினுயர்வைத் தெரிவிக்

ரும் பழமையான ஒரு கதையை இப்பொழுது சொல்
லுகின்றோம்.

முன்னொரு காலத்திலே கோதாவரி நதிக்கரையி
லே ஒப்பில்லாத வளங்களையுடைய சுபத்திரக மென்
னும் பெயருள்ள கிராமத்தில், பிராமண குலத்திற் பிற
ந்தவரும், வேத நூலையும் பிறநூல்களையுங் கரைகண்ட
வரும், சிரௌதம் ஸ்மார்த்த மென்னுங் கருமநெறியில்
வல்லவரும், மிகுந்தவழகுடையவரும், மகாசௌந்தரி
யமுடைய பத்திரதையாரென்னும் மனைவியாரோடும்
இல்லறத்தில் வாழ்பவருமாகிய சுபத்திரரென்பவர் விஞ்
ஞானம்பிகா சமேதராயும் கருணாநிதியாயும் மெய்ஞ்
ஞானத்தை யருளுவோராயும் எழுந்தருளி யிருக்கின்ற
விரூபாக்ஷப் பெருமானுடைய திருவடிகளை வழிபட்டு
க்கொண்டிருந்தார். அப்படி யிருந்த அவ்வந்தணர், வி
ரூபாக்ஷப் பெருமான் எப்பொழுதுந் திருவுள்ள மகி
ழும்படி நான்கு பாதங்களாகிய தவங்களுள் முற்பட்ட
சரியையினுட் பேசப்பட்டுள்ள திருநந்தனப்பணி செய்
யக்கருதி, வில்வம் ஆத்திமுதலிய மரங்களையும், மல்
லிகை முதலிய கொடிகளையும், செவ்வந்தி முதலிய புத
ல்களையும், தாமரை முதலியவைகளையும் வைத்துத் தி
ருநந்தன வனமுண்டாக்கி, அங்கே மலராநின்ற புஷ்ப
ங்களை யாராய்ந்தெடுத்து, கண்ணி தொடை கோவை
முதலிய மாலைகளை யமைத்து, விரூபாக்ஷப் பெருமா
னுக்குச் சாத்தி, நல்ல புஷ்பங்களினாலும் வில்வத்தினு

லும் பூசித்து, அறுசுவையோடு கூடிய அன்னத்தை யும் பலவகைக் கனிகளையும் நிவேதித்து, சிவபெருமா னுக்குப் பிரீதிசெய்யும் பஞ்சாக்ஷரத்தைச் செபித்து, பலவகைத் கைத்தாளங்களோடு அவர் சந்நிதானத்தி லே நடனஞ்செய்வார். சிவனடியார்களுக்கு எந்நா ளுந்திருவமுது செய்விப்பார். அன்போடு சிவநாமங்க ளையுச்சரிப்பார். இன்பத்தைத்தருஞ் சிவபெருமானு டைய திருவருள் வகைகளைக்கேட்க விரும்பிச் சிவக தை வல்லவராகிய பௌராணிகர் முகமாகக் கேட்டும கிழ்வார். இப்படிப்பட்ட நல்லநிலையிலே நிற்போராகிய சுபத்திரருக்கு, விஞ்ஞானம்பிகா சமேத விரூபாக்ஷ சுரருடைய திருவருளினாலே ஒன்பது புத்திரர்களுதித் தார்கள். அவ்வாறுதித்த புத்திரர்கள் வளர்ந்து, உரிய காலத்திலே விதிப்படி யுபநயனஞ்செய்யப்பெற்று, வே தம் முதலிய வித்தைகளை யெல்லாம் முழுதுமுணர்ந்து மகா பாண்டித்தியத்தை யடைய; அதுகண்ட தந்தை யார் சங்கநிதி முதலிய ஒன்பது நிதிகளுமே தம்மிட த்துவந்தாற்போலக் களிப்படைந்தார். குணச்செல்வ த்துக்கும் பொருட்செல்வத்துக்கு மிருப்பிடமாகிய அ ந்தச் சுபத்திரர், புதல்வர்களெல்லோருக்குஞ் சுபமுகூ ர்த்தத்திலே விவாகஞ்செய்வித்துச் சந்தோஷத்தோடு வாழ்ந்திருந்தார்.

இவ்வாறு சிலநாட்சென்ற பின்பு, சகல கலைகளி லும் வல்லவர்களாகிய ஒன்பது குமாரர்களும், முத்திய

டையவேண்டுமென்னும் ஆசையுடையவர்களாய், தங்கள் பிதாவாகிய சுபத்திரரையணுகி நமஸ்காரஞ்செய்து அஞ்சலியஸ்தராய் நின்று தங்கள் தங்க ளுள்ளக்கருத்தை யிவ்வாறு சொல்வாராயினுர்கள். ஒருபுதல்வர் கருமமேமேன்மையுடையதென்முர். மற்றொருவர் பத்தியே மேன்மையுடைய தென்முர். வேறொருவர் யோகமே மேன்மை யுடைய தென்முர். பின்னொருவர் ஞானமே மேன்மையுடையதென்முர். இந்தப்பிரகாரமே யாவராலும் விரும்பப்பட்ட உத்தமோத்தமமாகிய முத்திக்குக்காரணமாக ஒவ்வொன்றை மதித்து ஒவ்வொருவருஞ்சொன்னுர்கள். சுபத்திரர் அவற்றைக்கேட்டு மகிழ்ச்சியடைந்து பின்பு தமது குமாரர்களைப்பார்த்துச் சொல்லுகின்முர். புத்திரர்களே, உங்களுடைய மனமானது பரமுத்தியைத் தெளியவேண்டுமென்னுஞ் செயலிலே யியற்கையாகப் பொருந்தியிருத்தலால் ஐம்புலன்களின் வழிப்பட்டு வீடு வயல் சோலை முதலியவற்றிலமைந்த வாஞ்சையிலமுந்தியதில்லை. ஆதலால், நீங்களே பெரும்பாக்கியப்பேறுடையீர்கள். இவ்விஷயத்திற் சந்தேகமில்லை. உலகத்திலியைந்த போகங்களை யநுபவித்தும் இன்னும் என்மனமொடுங்கவில்லை. நம்முடைய குலமெல்லாமுய்ய நீங்களிப்பொழுது சொல்லியவைகளை நன்முய்த்தெளிந்து தேற்றுதற்கு நான் வலியுடையேனல்லேன். அதற்கு வேண்டியதோருபாயஞ் சொல்லு

கின்றேன் கேளுங்கள்; நாங்களெல்லோரும் பொருள் யாவையுமெடுத்துக்கொண்டு பூமியிலெங்குஞ் சஞ்சரிப்போம். நம்முடைய சந்தேகமெல்லாவற்றையும் யாவர் தீர்த்தருளுவாரோ அவரேயாவருக்குந்தலைவர். சத்துவகுணத்தின் மேம்பாட்டை யுடைமையால் அவரே நாம் பூசித்துத்துதித்து வணங்கவுந்தக்கவர். இது வுண்மையென்று மனத்திற்றெளிந்துசொல்லி, பின்பு மனைவி புத்திரர் பொருளோடுந் தமதூரைநீங்கி, நாடுகடோறுஞ் சென்று சஞ்சரித்து இளைத்து, சையமலையினின்றும் பெருகுவதும், பரிசுத்தமான நீரையுடையதும், சகல தேவர்களும் நிறையப்பெற்றதுமாகிய காவேரி நதியையடைந்து தரிசித்து, அதன்கரையிலுள்ள மிகுந்த மகாலிங்கங்களை யன்போடு வணங்கிப்பூசித்து, அந்தந்த க்ஷேத்திரங்களிலெல்லாம் விரும்பி வசித்து, பின்பு முற்காலத்தில் ஓர் யானைவந்து வழிபட்டு முத்திபெற்ற ஸ்தலமாகிய திருவானைக்காவை யடைந்து, அகிலாண்டநாயகி சமேதராகிய சம்புகேச்சுரப்பெருமானைப் பேரன்போடு வணங்கித் தம்முடைய விருத்தாந்தங்களையெல்லாம் விண்ணப்பஞ்செய்தார். அங்கேயுள்ள அந்தணர்களுக்கும் யோகிகளுக்கும் தங்கள் சந்தேகத்தை யன்போடு தெரிவித்தார். அவர்களொருவரும் அந்தச்சந்தேகத்தை நிவிர்த்தி செய்திலர். பின்பு அந்தஸ்தலத்தை நீங்கி அதற்குத் தென்பாகத்திலிருக்கும் பெருங்காட்டிற் புகுந்து புத்திரரோடும் வருத்த மடைந்து

இளைப்புற்றுச் சென்று, இந்திராணி பூசைசெய்த ஸ்தலமாகிய கீரனூரையடைந்து, பெரியநாயகி யென்னும் பெருமாட்டியோடு எழுந்தருளியிருக்கின்ற நித்தியானந்தராகிய உத்தமநாதஸ்வாமியைவணங்கி, நிகழ்ந்தவைகளை யெல்லாம் விண்ணப்பஞ் செய்தார். அதன்மேல் அந்தஸ்தலத்துக்குக் கீழ்த்திசையிலுள்ள திருப்பனங்காட்டை யடைந்து, அஞ்ஞான நாசினி நதிதீரத்திலே மங்கலாம்பிகையோடு மெழுந்தருளி யிருக்குந் தாலவனேசுரருடைய திருவடித்தாமரைகளை வணங்கி விருத்தாந்தங்களை விண்ணப்பஞ் செய்தார். பின்பு அந்தஸ்தலத்துக்குத் தென்றிசையில் அரனென்னுந் திருப்பெயருடைய சிவபெருமானால் நிருமிக்கப்பட்டதாய்ப் பிரமா விஷ்ணு முதலிய தேவர்களாற் பலசித்தியின்பொருட்டுச் சேவிக்கப்பட்டதாய் உத்தமோத்தமமாயுள்ள அரதீர்த்தமெனப் பெயரிய திருவரன் குளமென்னுந் திவ்விய ஸ்தலத்தையடைந்து, அரதீர்த்தத்திலே ஸ்நானம் பண்ணி, அதன்கரையிலுள்ள உத்தமமான சிவலிங்கத்தையும் கருணைப் பெருமாட்டியாகிய பெரியநாயகியம்மையையுந் தியானித்துப் பூசித்து மிகுந்த வன்போடு வேண்டி நிகழ்ந்தவைகளை விண்ணப்பஞ் செய்தார். பின்னர் அந்தஸ்தலத்துக்கு மேல்பக்கத்திலே, விஷ்ணு பிரமா இந்திரன் முதலிய எல்லாத்தேவர்களாலும் யோகிகளாலும் முனிவர்களாலும் மனிதர்களாலும் பசுமுத

லிய வுயிர்களாலுஞ் சேவிக்கப்பட்டதும் மிகுந்த பரிசுத்தமுடையதுமாகிய திருக்கோகர்ண மென்னும் மகாஸ்தலத்தை யடைந்தார். அந்தக் கோகர்ண மென்னும் ஸ்தலத்தில் ஞானமில்லாதபசுவும் பசுபதியாந் தன்மையையடையும். இவ்வகைத்தாகிய பெருமை யுடைய அந்தஸ்தலத்தின் விசேஷத்தை யெடுத்துச் சொல்ல வல்லவர் யாவர்? அந்தஸ்தலத்தில் வந்த சுபத்திரர் மங்கணதீர்த்த மென்னும் பெயருள்ள பரிசுத்த தீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணி, திருக்கோயிலுட்புகுந்து, அங்குள்ள வற்புதங்களை யெல்லாம் புதல்வரோடு விரும்பிப்பார்ப்பார். அங்கே மகிழமரத்தடியில் வடமொழியிலுள்ள ஆண்பாற்பன்மை விகுதியும் பெண்பாற் பன்மை விகுதியும் முறையாகத் தன்னிடத்திற் கொண்டதும் தன்னிறுதியில் விசர்க்கமமைந்ததுமான மயிற்குரலாகிய கேகா வென்னும் பதத்தை உமாதேவியாருடைய திருக்கரத்துக்கிளியானதுகேட்டு, நேற்று இங்கே பிறந்து சிவசாரூபமும் சத்திசாரூபமும் பெற்றனவாகிய கீடங்களுள் ஆடவர் யார் பெண்கள் யார் என்று இந்த மயில் கேட்டதென்று சொல்லும். இப்படிப்பட்ட எண்ணில்லாத இன்பமொழிகளைக் கேட்டு, உண்மையறிவானந்த வடிவாய்த் துன்பங்களைத்தீர்த்தருளுங் கோகர்ணப் பெருமானை அன்போடு விதிப்படி பூசித்து வணங்கித் துதித்து விருப்பமிகுந்து, பின்னர் என்னையும்அடிமையாக வுடையவரும், பெரும்புகழுக்கோ

ரியையுடையவரும், அண்டகோடிகளின் மத்தியத்தி லிருப்பவரும், சூரியனை யொத்த நல்லாபரணங்களையு டையவரும், பலவகை மந்திரங்களெல்லாந் தமது அவ யவமாக வுடையவரும், கருணாரசம் நிறைந்தவரும், சிவந்தவிசாலமாகிய திருக்கண்களையுமுடையவரும், கூதி ர்க்காலத்து விளங்காநின்ற சந்திரனையொத்த திருமுக மண்டலத்தையுடையவரும், பிரமாமுதற் கீடம்வரையு மமைந்த வுயிர்களுக்கெல்லாம் மாதாவும், சகல லோக ங்களுக்கும் ஆதாரமானவரும், சோடசாக்ஷரி மந்திர த்தைத் திருநாமமாக வுடையவரும், பஞ்சதசாக்ஷரி மந்திரத்தைத் திருவுருவாகவுடையவரும், ஏழுகோடி மகா மந்திரமாகிய பீடத்தினடுவே வீற்றிருப்பவரும், செல்வத்தை நீங்காமேயருளுபவரும், பெருந்தேவியா ரும், புவனேசுவரியுமாகிய பெரியவம்மையென்று புக ழப்படுந் தலைவியாருக்கும் அப்படியே ஏற்றவகை நற் பூசை செய்து வழிபட்டுத் தம்புதல்வரோடும் அங்கே யிருந்தார். அப்படி யிருக்கும்பொழுது யோகப்பயிற் சியுடைய மங்கண ரென்னும் முனிவர் அவ்விடத்தில் வந்து, தேவர்கள்சூழும் கோகர்ணேசுரரையும் பெரியவ ம்மையாரையுந் தரிசித்து வணங்கித்துதித்து மனமகி ழுஞ்சமயத்திலே, மனவெறுப்புடையவராயும் இளைப்பு மிகுந்தவராயும் மனைவி புதல்வரோடு கூடியவராயும் அங்கேயிருந்த தெளிந்த தவத்தையுடைய சுபத்திரரைக்

கண்டு, கள்ளமில்லாக் கருத்துடையவரே! நீர்கலங்குவ தற்குக் காரணமென்னை? சொல்லுமென்றுகேட்க;அவர் அன்போடுதமதுவர்த்தமானங்களையெல்லாஞ்சொன்னார். அதுகேட்ட மங்கண முனிவர், இரண்டுநாழிகை வரை யுந் தமதுமனத்தி லாலோசித்துத் துணிபுசொல்ல விய லாதவராய் அவருக்குத்தைரியவார்த்தை சொல்லி, இங் கே யெழுந்தருளி யிருக்கின்ற கருணையே வடிவமாகவு டைய கோகர்ணேசுரரும் பெரியவம்மையாரும் நம்முள் ளத்தைத் தெளிவித் தருளுவார்க ளென்று கூறினார். அவ்வார்த்தையைக் கேட்ட சுபத்திரர் மகிழ்ந்து, மங்க ணமுனிவரோடு பெரிய வம்மையாருடைய சந்நிதானத் திலே யிருந்தார். அவ்வாறிருக்கும் பொழுது ஆகாசத்தி னின்றும் சிவபெருமானுடைய அசரீரி வாக்கொன் றெ ழுந்தது. இந்தஸ்தலத்துக்குத் தென்பக்கத்திலே ஒரு யோசனை தூரத்திலே சத்தியபுட்கரிணி தீர்த்தத்துக்கு த் தென்பக்கத்திலே சத்திய கிரியென்னும் பெயருள்ள திருமெய்ய மாகிய உத்தமக்ஷேத்திர முள்ளது. அதற் குத் தென்மேற்குத் திசையிலே ஐந்து கூப்பிடு தூரத்தி லே இளையாற்றங் குடியென்னும் மகத்தாகிய ஸ்தலமிரு க்கும். எல்லோருக்குந் திருவருள் செய்யும்பொருட்டு அந்தஸ்தலத்திலும் நாமே சுயம்புவடிவா யெழுந்தருளி யிருப்போம். உலகங்களுக் கெல்லாந் துன்பந் தீர்க்கும் மாதாவாகிய பெரியவம்மையும், தேவர்களுடைய வே ண்டுகோளுக் கிசைந்து நித்திய கல்யாணி யென்னும்

பெயரோடு பிரசன்னமா யிருக்கின்றாள். தேவர்களாலே பூசிக்கப் பட்டதாயும் பெரும்பொருளாயும் மறைபொருளாயும் பிரகாசியா நின்ற அந்த மகாலிங்கத்தி னுடைய சந்நிதானத்திலே சிவதீர்த்தமெனப் பெயரிய தீர்த்தமொன்றிருக்கின்றது. அருந்தவ முடையவனே, அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால் நமதருளினாலே உங்களெல்லோருக்கும் மனத்துள்ள சந்தேக மெல்லாம் நீங்கும். ஐயமில்லையென்று ஆகாயத்தினின்றும் எழுந்த திருமொழியானது தமதுகாதுகளிற் புகுதலும், ஐயமிகுந்த சுபத்திரனார் மனத்துயர்நீங்கி ஒப்பில்லாத மகிழ்ச்சிக் கடலிலாழ்ந்து மனந்திகழ்ந்து, புதல்வரோடு விரைந்து சென்று, இலைசையாகிய மகாக்ஷேத்திரத்தை யடைந்தார். அவ்வாறடைந்த சுபத்திரனார் குமாரர்கள் தெளிவைத்தருஞ் சிவதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து அந்தத் தீர்த்தத்தின் விசேஷத்தால் உள்ளத்திருந்த சந்தேகமெல்லாம் நீங்கி நவசித்தரென்று புகழும்படி வசித்தார்கள். அதனால், அந்தணர்களே! அந்தச் சிவதீர்த்தத்திற்கு நிகராகிய தீர்த்தம் வேறில்லை யில்லை. இது உண்மை.

தலவிசேடமுந் தீர்த்த விசேடத்திற் சுபத்திரன்

கதையுமுரைத்த படலம் முற்றிற்று.

---

மூன்றாவது.

## சுபத்திரன் சித்திபெறு படலம்.

என்று சொல்லியருளிய அகத்திய முனிவருடைய வார்த்தையை முனிவர்களினிது கேட்டு, தீர்த்தப்பெருமையறிந்த தேவரீர் நன்கருளிச் செய்தீர். சுபத்திரனார் தம்புதல்வரோடு அந்தச் சிவதீர்த்தத்தின் விசேஷத்தால் அங்கேயெவ்வாறு மனச்சந்தேகந் தீர்ந்தார்? விந்தியபருவதத்தி னகந்தையையடக்கிய முனிவரே? சொல்லியருளுமென்று விஞ்ஞாபனஞ்செய்ய; குடத்தினின்று முதித்தோராகிய அகத்தியமுனிவர் சொல்லியருளுவார்.

திருக்கோ கர்ணத்தெழுந் தருளி யிருக்குஞ் சிவபெருமானுடைய திருவாக்கைத் தலைமேற் கொண்ட சுபத்திரனார், புத்திரரோடும் கோகர்ணேசுரரையும் பெரியவம்மையாரையும் அன்போடு வணங்கித் துதித்து, மங்கண முனிவரிடத்தே விடைபெற்றுக்கொண்டு அந்தஸ்தலத்தை நீங்கி, சிவவாக்கைப் பலமுறையும் நினைந்து நினைந்து, இளைசையம் பதியின் பெருமை இவ்வளவினதோ வென்று சிந்தித்து ஆச்சரியமுற்று, மிகுந்த வேகத்தோடு திருமெய்ய மலையையடைந்து, சத்திய புட்கரிணி தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி, சத்திய கிரீசுரரையும் தேவியாரையும் பத்தியோடு தரிசித்து வணங்கியெழுந்து, அசுரரைச் சங்கரித்த சார்ங்க பாணியாகிய விஷ்ணுவையும் வணங்கி, அந்தப் பருவதத்துக்

குத் தென்மேற் றிசையிலுள்ள பெருங்காட்டினுட் புகுந்து இளைத்தயர்ந்து, அப்பாலும் சிறிது தூரஞ் சென்று வருத்தமடைந்தார். திசைகள் காணுத காட்டிற் புகுந்திளைத்த சுபத்திரர், தண்ணீர்த் தாகந் தலைக்கொள்ளலும் நெடுமூச்செறிந்து தண்ணீர்தேடி வெதும்பிச் சோர்ந்து, பலசரீரங்களை யெடுத்துச் சலித்தவர் நல்ல குருவருளை யடைந்தாற்போல, குசைநுனியை யொத்துக் கூர்ந்த மதியை யுடையவர்களே, சிவதீர்த்தம் விளங்கக் கண்டார். உள்ளத் தேர்ச்சியை யுயிர்களுக்குக் கொடுக்கும் பெருமையதாகிய சிவதீர்த்தத்தைக் கண்டு மனமகிழ்ந்து, புத்திரரோடும் அந்தச் சிவதீர்த்த ஜலத்தில் ஸ்நானம் பண்ணி யெழுந்து, நித்திய கருமங்களை யெல்லாங் குறைவற முடித்து, மிகுந்த சுவையுடையதாகிய அந்தநீரிற் பருகிக் கரையேறி யிருந்தார்.

கலைகளில் வல்ல முனிவர்களே, அவர் அப்படியிருக்கும் பொழுது, மெய்ஞ்ஞானத்தை வடிவாகவுடைய சிவபெருமான், திருவருள் புரியத் திருவுள்ளத்தில் விரும்பி, பவளம்போன்ற திருச்சடை முடிவிளங்கவும், யோகபட்டம் பிரகாசிக்கவும், புலித்தோலுடை திருவரையிற் பொருந்தவும், விபூதி திருமேனியிலொளி செய்யவும், உருத்திராக்ஷமாலை நெருங்கவும், கூதிர்க்காலத்துச் சந்திரனை யொத்த திருமுகத்திற் புன்முறுவல் பொலியவும், கோடி மன்மதர்கள் வடிவெல்லாங்

திரண்டொன்றாகி விளங்கினாற் போன்ற திருமேனி யழகு பரவவும், பொற்பிரம்பு திருக்கையிலே துலங்க வும் ஒரு சித்தவடிவ மெடுத்தருளி, எல்லா வவயவங் களு மழகுபெற்ற பெண்ணரசியா ரோடும் சிவதீர்த்தக் கரையை யடைந்தருளினார். வேதங்களினாலும் வாக்கி னாலும் மனத்தினாலும் இவ்வாறென்று மதிக்கக் கூடா மல் எவ்விடத்திலுமிடையறாது வியாபித்து நின்று பரம் பொருளெனப்படுகின்ற அமல மூர்த்தியாகிய சிவபெரு மான், தெரிந்துகொள்ளுதற்கு எளியவராய் அம்மை யோடு மெழுந்தருளிவந்தும், சுபத்திரர், அவருடைய பெறுதற்கரிய திருவடியை மயக்கத்தாற் பேணாதிருந் தார். இந்தப் பிரகாரந் தம்மைப் பொருட்படுத்தா திரு க்கவும், சிவபெருமான் உயிர்களுக்கு எவ்வகையாலு மெளிவந்து வழியடிமைத் தன்மையைத் தெளிவித்துப் பெருமையருளும் பெருங்கருணைத் தடங்கட லாதலால் அந்தச்சுபத்திரையும் புத்திரரையுங் காத்தருளத் திருவு ளங்கொண்டு அவர்களை நோக்கி யிவ்வாறு அருளிச்செ ய்கின்றார். நீங்கள்யார்? எவ்விடத்திலிருந்து இவ்விடத் திற்கு வருகின்றீர்கள் ? மனத்திலே நீங்காத சந்தேகமு டையவர்களாகக் காணப் படுகின்றீர்கள்? இவற்றை யெ ல்லாம் நமக்குச் சொல்லுங்கள் நாம் தக்க துணிபுரை சொல்லுவோ மென்று தேவர் குழாங்களும் வணங்கி யேத்துஞ் சித்தர்பெருமான் புன்முறுவலோடுஞ் சொ ல்லி யருளினார். சுபத்திரர் அவற்றைக் கேட்டு, முத்தி

மார்க்கத்தி னின்றோராகிய மகான்களா லுபதேசிக்கப் படுந் தன்மையுடைய மேன்மைத்தாகிய வுண்மைத் திறத்தைப் பெண்ணோடு சேர்ந்தவிவர் எவ்வாறோ சொல்லுவாரென்று நினைந்து, சிவபெருமானது திருவாக்கினிடத்தே யன்பு செய்யாமற் புதல்வரோடு மிருந்தார். இருக்கும் பொழுது, இப்படியர் இந்நிறத்தர் இவ்வண்ணத்தர் இவரென்று தம்மைக்காணுதல் உயிர்களுக்குக் கூடாதாக, அப்படியையும் அந்நிறத்தையும் அவ்வண்ணத்தையும் தமதருளாலே தாமே காட்டியருளும் பெருமானாகிய சிவபெருமான், அவர்களை மார்ச்சால சம்பந்த நியாயம்பற்றியருளத் திருவுளங்கொண்டு, தேவியாருடைய திருமுகத்தை நோக்கி யருளிச் செய்கின்றார். மங்கல வியல்புடையவளே, நம்முடைய வடிவத்தை யிவர்கள் மதியாதிருக் கின்றார்கள், இவர்கள் பரமார்த்த விஷயத்திற் சந்தேகம் மிக்கவர்களாய் அதிதூரத்தி லிருந்து வந்திருக்கின்றார்கள், இவர்கண்மனத்துள்ள ஐயமெல்லாம் நாமே நீக்கி ஞானங் கொடுப்போம். யாமோ எவற்றையும் அறிவோம்; எவற்றையுஞ் செய்வோம். இவைகளை யிவர்க ளறிகின்றா ரில்லையென் றருளிச் செய்ய; சுபத்திரர் புத்திரரோடும் இத்திருவாக்குக்களைக் கேட்டு, உயர்ந்த பெரியவரே, எங்களுள்ளக் கருத்தைத் தேவரறிவீராயின் உள்ளபடி சொல்லி யருளுமென்று விண்ணப்பஞ் செய்ய; கருணாமூர்த்தியாகிய சிவபெருமான் திருவாய் மலர்ந்து இவ்வாறு அருளிச்செய்வா

ராயினர். ஐயம்பொருந்திய மனத்தையுடைய அந்தண ர்களே! கேளுங்கள். பொருண் மிகுந்த வேதம் முதலிய அருணூல்கள் பேசாநின்ற தெளிவாயுள்ள பெறுதற் கரிய துணிபை உங்கள்மனந் தேறும்படி யுபதேசிப் பாம். அறம் பொருள் இன்பம் வீடு என்று சொல்லப் பட்ட நான்கு புருஷார்த்தங்களுள், அறம் பொருள் இன் பம் என்னும் முன்னைய மூன்றும் அழிதற் பாலனவாத லால், புறவிஷயத்திற் செல்லுஞ் சிந்தை யில்லாதவர்க ளே, இறுதியிற் சொல்லப்பட்ட சர்வ சம்மதமான வீ டொன்றே யழிவில்லாததா யிருக்கும். அந்த வீட்டிற் குக் காரணம் ஞானம். இந்தப்பிரகாரம், "வேறு வழி யில்லை" யென்னும் பொருளினையுடைய வேதவுண்மை யைத் தலைக்கொண்ட வலத்தால் நூல்களெல்லாம் முழ ங்கிச்சொல்லும். அந்த ஞானத்தை யடைதற்குரிய காரணங்கள், ஆரணபாகம் பேசுகின்ற கரும ஜாலமும் இன்னும் பத்தியும் யோகமு மென்னு மிவைகளாம். உண்மை யறிவானந்த வடிவாய், மனம் வாக்குக்கட்கதீ தமாய், அருவமாய், நிர்க்குணமாய், மகிமை யுடைய தாய், செய்கை வகையொன்று மின்றி ஞானமயமா யிரு க்கும் பரப்பிரமமானது, அருளுறு மாயாசத்தியின் சார்பினாலே குணமுடையதாய் யாவரும் வழிபடுதற் கேற்றதாகி ஈசாதிநாமங்கள் வாசகமாய்விளங்கவாச்சிய மாய்விளங்கி உயிர்களுக்கு அருள்செய்துநிற்கும். அப்ப டிப்பட்ட வாச்சியரூகியபரமேசுரனைப் புகலாகக்கொள்

ளுதல் பத்தியென்று சொல்லப்படும். அந்தப் பிரசிவ வடிவத்தோடும் மன மொன்றச்செய்தல் யோகமாம். சிவபெருமா னருளிச்செய்த வேதங்களாலே விதிக்கப் பட்டனவாய் ஸ்மிருதிகளினாலே தெரிவிக்கப் பட்டன வாயுள்ள கருமங்களை யாராய்ந்து செய்தல் வேண்டும். அவைகள் சித்த சுத்தியை யுண்டாக்கும். சித்த சுத்தி யினாலே விரத்தி யுண்டாகும். விரத்தியினாலே சாந்தி யுண்டாகும். சாந்தியினாலே தத்துவஞானம் வந்து தலைப்படும். அதுவே முத்தியிற்செலுத்துகின்ற சுவாநுபூதிக்கு உத்தமகாரணமாகும். பிரமா முதலிய தேவர்கள் முத்தியைவிரும்பி எந்நாளும் மிகுந்த முயற்சி செய்கின்றார்கள். சொரூபத்தை யுணர்தல் முத்தியாகும். அந்தச் சொரூபமுழுதும் மிக மறைக்கப்பட்டுள்ளது. உலக முதிக்கநின்ற மூலமாயை அந்தக்காரணத்தைப்பற்றியிருக்கும். அதனாலே அந்தக்காரணம்அநாதிமலத்தோடு தொடர்ந்ததென்று சொல்லுவர், மூன்று மலங்களை விபரீதமின்றி விவேகித் துணர்தல் ஞானத்தினாலேயே யுண்டாகும். அந்த ஞானத்தைச் சித்த சாந்தி யுண்டாக்கும். அந்தச்சித்தசாந்தி வைராக்கியத்தின்மையாலுண்டாகும். அந்த வைராக்கியத்தை, நித்தியாநித்திய பொருள்களைப் பகுத்துணர்தல், இம்மை மறுமைப் போகங்களில் வெறுப்பு, சமமுதலிய ஆறுபெற்றி, முத்தியிலாசையென்னும் நான்கு சாதனங்களுண்டாக்கும். அந்தச் சாதனங்கள் வேதாந்த வாக்கியக் கேள்வியினாலே

யாகும். அந்தக்கேள்வி மிகுந்த பத்தியினு லுண்டாகும். அந்தப்பத்தி நற்றவர்களுடைய சங்கத்தா லுண்டாகும். அந்தச்சங்கம் சிரத்தையினு லுண்டாகும். அந்தச் சிரத்தையும் கற்றவ ரொழுகாநின்ற கருமத்தினு லுண்டாகும். இங்கே சொல்லப்பட்டகருமமெல்லாஞ் சுருதிகள் விதித்தலாலே சிரௌதமென்றும், ஸ்மிருதிகள் விரித்துச் சொல்லுதலால் ஸ்மார்த்தமென்று மிருவகைப்படும். அந்தக் கருமங்களைத் தேருமறிவு வேதங்களினுலே யுண்டாகும், அந்த வேதமும் ஆன்ருேரொழுக்கைத் தழுவிநிற்கும். தகுதியான வொழுக்கந்தேர்ந்து நிற்கும் அந்தணன் இவ்வுலகத்தார் துதிக்க இம்மையிற் பெரும்பய னடைவான். ஒழுக்க மில்லாதவனை வேதங்கள் சுத்தி செய்ய மாட்டா. ஒழுக்கமுடைய விப்பிரனுக்கே சித்தியெல்லாஞ் சேரும். இம்மை மறுமையென்னு மிருமைப்பயன்களை யெல்லாம் ஒழுக்கமுடைய விவனேயடைவான். ஆதலால் ஒழுக்கமுடைய கருமங்களை நன்ருராய்ந்து செய்குக. அறிவுடையவன் மேற்கூறிய சாதனங்களை யெல்லாந்தேடிவேதமுணர்ந்த நல்ல பெரியாரோடு மகிழ்ந்து சகவாசஞ் செய்து இன்பத்தைத் தரும் மெய்ஞ்ஞானத்தைத் தரும முயற்சியினுலே சம்பாதித்து மேலே பிறவிசாராத் தன்மையாகிய சுவாநுபூதி ரூபமாகிய முத்தியை யடைகவென்று உபதேசித்து, திருவுள்ளத்து மகிழ்ச்சிமிகத் தேவியாரோடு சிரித்துக்கொண்டும் பேசிக்கொண்டுமிருந்தருளி

றார். அவர்யாரோ வென்றால், மனத்தூய்மை யடை
ந்து கெடாத பேரின்பத்தை விரும்பினோர்களது வினைக்
கேற்பத் தோன்றி முத்தி கொடுத்தருளுங் கருணா மூர்
த்தியாகிய சிவபெருமான். அப்பொழுது சுபத்திரர் தம்
புத்திரரோடும் பத்தினியாரோடும் சந்தோஷ சாகரத்தி
லமிழ்ந்தி மிகுந்த வாச்சரியத்துடனே சித்தவடிவங்கொ
ண்ட சிவபெருமானையும் தேவியாரையும் திருவடிகளில்
வணங்கி நின்று இவற்றை விண்ணப்பஞ் செய்கின்றார்.
பெரியவரே, தமியேன் விண்ணப்பஞ்செய்யும் வார்த்தை
களைக் கேட்டருளும். இப்பூமண்டலத்தி லுள்ளவர் யா
வராலும் நீக்குதற் கரிதாகி யெங்கள் மனத்திலே மயக்
கஞ்செய்து கொண்டிருந்த வலிய சந்தேகத்தைத் தீர்த்
தருளினீர். ஆதலால் நமக்குத் தேவரீரே பெருந்தலைவ
ராயினீர். உலகமெல்லாந் தொழும் புராதனரும் யோக
நிலைமை சார்ந்த பெரியோருக்கும் மற்றையோருக்கும்
முதல்வருந் தேவரீரன்றோ? அப்படிப்பட்ட பெருமா
னே! தேவரீர் யாவர்? தேவரீர் எழுந்தருளி யிருப்பதெங்
கே? எவ்விடத்திலிருந்து இங்கேஎழுந்தருளினீர்? தேவ
ரீர் மனிதரல்லீர். தேவரு மல்லீர். சிவபெருமான் போ
லத் தோன்றுகின்றீர். தேவரீரைத் தரிசித்த மாத்திர
த்தே நல்லறிவு தோன்றியது. எம்பெருமானே, இனி
மேலெங்களுக் கொரு துன்பமில்லை. பெண்ணோடுதோ
ன்றுந் தேவரீருடைய திருக்கோலம் முயன்றுதேரினும்
அறிதற்குக் கூடாததாக விருக்கின்றது. ஞானிகளா

வார் சங்கமெல்லாம் நீங்கி விரத்திபொருந்திய மனமுடையவராயிருப்பார். ஆதலால் பெண்ணோடுசாருந் தேவரீரது சித்தம் புலன்களை விரும்பியதென்றலன்றோ சொல்லவேண்டும். ஆயினும் தேவரீருடைய திருக்கோலம் மனம்வாக்குக் கட்கதீதமா யிருக்கின்றது. உமாதேவியாரை வாமபாகத்திற்கொண்டருளிய சிவபெருமான் போலத் தோன்றுகின்றமையால் தேவரீருடைய திருக்கோலவியல்பை யெல்லாங் கருணையினால் இப்பொழுது கட்டளையிட்டருளுமென்று விண்ணப்பஞ்செய்தார். அந்த வேண்டுகோளை யோகத்திருவுருக் கொண்டருளிய எம்பெருமான் செவிவாய்மடுத்தருளித் தேவியாரோடும நகைக்கின்ற திருமுகமுடையவராய் யாதொருவார்த்தையும் அருளிச்செய்யாதிருந்து சென்று ஒப்பில்லாத மனோகரமான இலிங்கத்தின் மறைந்தருளினார்.

ஒன்றுசெய்தலுஞ் செய்யாமையும் வேறொன்றுசெய்தலுமாகிய இவைகளை நாங்களுய்யுந் திறத்தையே பொருளாகக் கொண்டு முயலுங் கருணைவள்ளலாகிய சிவபெருமான் காரணாதியவயவங்கள் தோன்றாத சாதாக்கிய மாகிய மகாலிங்கத்தில் மறைந்தருளலும், மனத்துயரெல்லாந் தீரப்பெற்ற சுபத்திரர் அதனைக் கண்டார். கண்ட மாத்திரத்திலே தமது புத்திரரோடும் இன்னபடி யென்று நினைத்தற்கரிய பேராச்சரிய மடைந்து, அங்கே விரைந்துபோய், திருச்சடையுருத்திராக்ஷ

மென்னு மிவற்றினடையாளங்கொண்டு விளங்காநின்ற மகாலிங்கப் பெருமானையும் சிறந்த பொலிவு வாய்ந்த தேவியாரையுந் தரிசித்துப் பேரன்போடு வணங்கி, சிவ பெருமானுக்கும் தேவியாருக்கும் பலவகைப் புஷ்பங் களினாலே நல்ல பூசையைச் செய்தார். மனம் முதலிய வைகளா லளவுகாணுதலரிய அநாதிசித்த லிங்கத்திற் கமையும் விமான முதலியவற்றைத் தமது பொருளாற் சிற்பசாஸ்திரம் விதித்தபடி விரைவிலுண்டாக்கி, முன்பின் வேறுபாடுறாதபடி பெரும்பூசைசெய்து, உயிர் களுக்கெல்லாம் பரிந்து பயனுதவும் பகவானைப் பல முறை வலம்வந்துவணங்கி, மனமெல்லாம் நெக்குநெக்குருகவும்; கண்களினின்றும் ஆனந்தவருவி சொரியவும்; உடலெல்லாம் உருமாஞ்சங்கொள்ளவும்; நாத்தழுதழுப்பவும்; திருமுன்னேநின்று ஸ்துதிக்கின்றார். ஆன்மதத்துவம் முதலிய தத்துவங்கள் தோன்றுதற் கிடமான மகாலிங்கவடிவுடையவரே, மார்ச்சால சம்பந்தம்பற்றி யெவ்வகையாலும் அடியேங்களை யாட்கொண்டருளிய பேரிறைவரே, பத்தியோடு வணங்குகின்றவர்களுடைய வணக்கத்தை யேற்றருளும் பரம்பொருளே, சித்தரெல்லாம் வணங்கித் துதிக்கும் சித்தேசுரரே, தேவரீருக்கு நமஸ்காரம். நமஸ்காரம். பிரமா முதலிய தேவர்களாலே தேடப்படுந் திருவடிப் பெருமை யுடையவரே, எவர்களாலும் வணங்கப்படுந்தன்மையரே, விசுவநாயகரே, தேவர்களுக்கிறைவரே, இரணியாக்கன் முத

வியப்பகைவர்களுடையமுப்புரங்களைமுடிவுசெய்தவரே, நிலைபெற்றவீசானரே, அருமைமிகுந்த மங்கலத்தையே யியல்பாக வுடையவரே, விஷ்ணுவாகிய பாணத்தையுடையவரே, சிறந்த பூச்சியரே, உமாதேவியார் மகிழும் பாகத்தையுடையவரே, கடையேன்மீது கருணைக்கடைக்கணேக்கம் வைத்தருளும். முதலும்முடிவுமில்லாதவரே, தேவர்களெல்லாம் அஞ்சலிசெய்து வணங்குகின்ற செந்தாமரை மலர்போன்ற திருவடிகள் கொண்டவரே, அந்தகனுக்கந்தகரே, அந்தகாசுரன் மார்பைப் பிளந்தவரே, கிருபாசமுத்திரமே, சித்தவனநாதரே, நாதரே, விபுதர்களாலும் ஆகமங்களாலும் துதிக்கப்படுஞ் சிறப்பையுடையவரே, உமாதேவியார் மகிழும் பாகத்தையுடையவரே, கடையேன்மீது கருணைக் கடைக்கணேக்கம் வைத்தருளும். மிருத்தியுஞ்சயரே, மலரகிதரே, சர்வவியாபகரே, சந்திரசேகரரே, நன்மையைத்தருபவரே, மன்மதனையெரித்தவரே, சந்திரன் சூரியன் அக்கினி யென்னும் மூன்று திருக்கண்களை யுடையவரே, மூவுலகங்களுந்தோன்றுமாறு நின்ற முழுமுதற் கடவுளே, திருக்கைலாச பருவதத்தில்வீற்றிருந்தருளும் பெருவாழ்வே, அடைக்கலம் புகுந்தோர்களுக் கின்பமளிக்கு மெம்பெருமானே, உமாதேவியார் மகிழும் பாகத்தையுடையவரே, கடையேன்மீது கருணைக் கடைக்கணேக்கம் வைத்தருளும். பாற்கடலிற் றோன்றும் நுரைபோன்ற திருப்புன்முறுவல் விளங்குந் திருமுகத்

தையுடையவரே, கங்கையைத்தரித்த திருச்சடையை யுடையவரே, என்று மழிவில்லாதவரே, தூண்டாதவிள க்குப் போன்றவரே, சூலத்தைத் திருக்கையிலுடைய வரே, எவர்களுக்கும் நாயகரே, அமரர்களுக்கீசரே, முனி வர்களடிவணங்கு மெம்பெருமானே, உமாதேவியார்மகி ழும் பாகத்தையுடையவரே, கடையேன்மீது கருணைக் கடைக்கணோக்கம் வைத்தருளும். சந்திரன்போன்ற வெண்மைவிளங் நாநின்ற திருவுருவமுடையவரே, நல்ல வர்கள் புகலடைந்து வணங்குமாதியே, ஆறு சாஸ்திரங் களினாலே யறிவிக்கப்படுஞ் சிறப்பினையுடையவரே, கவி பினால் வணங்கிப் பூசிக்கப்பட்ட திருவடிகளை யுடைய வரே, வேதசிரசுகளாகிய உபநிஷத்துக்களினாலே யுணர் த்தப்படும் பழமையுடையவரே, ஆப்தவாக்கியமானவா கமமாகிய கூட்டிலிருக்கின்றவரே, உமாதேவியார் மகி ழும் பாகத்தையுடையவரே, கடையேன்மீது கருணைக் கடைக்கணோக்கம் வைத்தருளும். என்று இவ்வாறு சுபத்திரர் மகாதேவராகிய எம்பெருமானைத் துதித்து, அன்பினால் வணங்கு முள்ளமுடையவராய் நின்று, சில வேண்டுகோளை விண்ணப்பஞ்செய்வார். தமியேனையா ண்டருளியவரே, எல்லாவற்றையு மறிந்தவரே, உலகத் துக்கெல்லாம் முதல்வரே, தேவரீருடைய தீர்த்த மகி மையால் தேவரீரைத் தரிசித்து நாங்கள் சித்தியடைந் தோமாதலால் இந்தஸ்தலத்துக்குச் சித்த க்ஷேத்திர மென்றும் மகாலிங்கத்துக்குச் சித்தபதியென்றும் தீர்த்

தத்துக்குச் சித்ததீர்த்தமென்றுந் திருப்பெயர் யாவருஞ் சொல்லுக. மகாப்பிரபுவே, இன்றுதொட்டு உலகெங்கும் இத்திருப்பெயர்களோங்கிச் சிறத்தலேயன்றியும் பல சிறப்புண்டாகுகவென்று வேண்டினார். அவ்வாறு வேண்டினமாத்திரத்தே, சிவபெருமானுடைய திருவாக்கு ஆகாயத்திலே ஓமென்றெழுந்தது. அங்கேநின்ற சுபத்திரருக்கு அந்தத் திருவாக்குப் புத்தமுதம்போலச் செவியிற்புகுதலும், மகிழ்ச்சிமிகுந்த மனத்தையுடைய அவ்வந்தணர், நம்முடைய வெண்ணமெல்லாம் நிறைவேறின வென்று நினைந்து, பின்பு தம்புதல்வருக்கு இவ்வாறு சொல்லுவார். புத்திரர்களே, சத்தியஞானானந்த லக்ஷணமுடையவரும் எவற்றையும் என்றும் அறிபவரும் கருணாமூர்த்தியுமாகிய மகாதேவ நாமமுடைய சிவபெருமானை இருதயகமலத்திலே தியானித்துச் சிவமயமாய்ப் பிரமாகம்பாவனை யடைந்து இடையறாத வின்பத்தழுந்துவேன். மறுமை நிலைக்கு யாதேனும் வழுவாரதபடியுள்ள தருமநெறியிலே நின்று வேண்டுவனவற்றைச்செய்யுங்களென்று உறுதிமொழிசொல்லிப் பின்னர்ச் சிவனை யுள்ளத்திலே நிறுத்தித் தியானித்து இன்பநிலையிலிருந்தார். புத்திரர்களும், உண்மை நூற்பொருள்களைத் தந்தையாரிடத்திலே தெரிந்து முடிவில்லாவுணர்ச்சியைப்பெற்றுத் தங்கள் கருத்தேறக்கெடுதலில்லாத சுகத்தையடைந்தார்கள். அந்தவொன்பது புத்திரருள் முதற்புத்திரரான வுத்தாலர் அடசித்தமொன்னும்

பெயர்பெற்றார். இரண்டாம் புத்திரரான சாலங்கர் கரும சித்தரென்னும் பெயர்பெற்றார். மூன்றாம்புத்திரரான சுமனஸ்கர் பத்திசித்தரென்னும் பெயர்பெற்றார். நான்காம் புத்திரரான ககோளர் வேதசித்தரென்னும் பெயர் பெற்றார். ஐந்தாம் புத்திரரான சுசாந்தர் ஞானசித்தரென்னும் பெயர்பெற்றார். ஆறாம் புத்திரரான சந்நிதி நாமசித்தரென்னும் பெயர்பெற்றார். ஏழாம் புத்திரரான குலேசுரர் இலயசித்தரென்னும் பெயர்பெற்றார். எட்டாம் புத்திரரான பாசகர்ணர் காமசித்தரென்னும் பெயர்பெற்றார். ஒன்பதாம் புத்திரரான நாடாயனர் தாரயோகியென்னும் பெயர்பெற்றார். இங்கே சொல்லப்பட்ட ஒன்பது புத்திரர்களும், நன்றாயோர்ந்து தத்தமக்குவேண்டுவனவாகிய சித்திகட்கேற்றபடி அட்டம் முதலிய வகைகளையனுட்டித்து, அவைகளாலடையப்பெற்ற சித்திகளாலிப்பெயர்களைப்பெற்று நவநாதரென்னும் பிரசித்தியெய்திக் குருவின்மீது பத்திமிகுந்து, சின்முத்திரையோடிருந்து தம்மிடத்துண்டாகிய இன்பத்தை யகலாமேயடைந்தார்கள். இந்தப்பிரகாரம் அந்த க்ஷேத்திரத்திற் சித்தசாமியினுடைய திருவருளாற் பெருஞ்சித்தியையடைந்து மேலாகிய தூய்மைநிறைந்த நவசித்தர்கள், சித்தவித்தைப்பழமை மிக்கவராய், சித்தர்கள் கைக்கொண்டு உய்வுறத் துயர்தீர்க்கு மூலிகைகளாலுடல் வலிபெற்று, ஆகருஷணம் ஸ்தம்பனம் நிக்கிரகம் அநுக்கிரகமென்னு மிவைகள் செய்யவல்லவராய், எவ்வுலகத்தி

னுஞ் செல்ல வலிமையடைந்தவராயிருந்தார்கள். தேவாதிதேவரான சித்தநாதர் திருவருளால் சுபத்திரரும், மனைவியாரோடும், சச்சிதானந்த வடிவினரும் உள்ளத்திலமுதூற்றுமமுதானவருமான சிவபெருமானை யிடையறாது மனத்திலே தியானித்து மலத்தாலுண்டாகிய பற்றுநீங்கி யோகீசுரராய் அரிய யோகானந்தத்தை யடைந்து என்று மழிவில்லாத சாயுச்சியத்தைப்பெற்றார். இவ்வாறே சுபத்திரர் புதல்வரோடு சித்தியடைந்தமையால் அதுமுதல் அந்தச் சிவதீர்த்தம் சித்ததீர்த்தமென்னும் பெயரையடைந்தது. அந்தத் தீர்த்தமானது, தரிசித்தாலும் நினைந்தாலும் மனத்திலெண்ணியவைகளை யெல்லாமெண்ணுமுன் கொடுக்கும். முனிவர்களே, அந்தத்தீர்த்தத்தின் மகிமையை நாமெவ்வாறெடுத்துச்சொல்லுவோம்! கைலாசநாதரென்னும் மகாலிங்கத்துக்குஞ் சித்தேசரென்னுந் திருநாமமுண்டாயிற்று. அந்த மகாலிங்கத்தின் பெருமை விரிவுற்றதாதலால் இப்படியென்று சொல்லுதல் கூடாது. அந்த ஸ்தலத்திற்குஞ் சித்தவனமென்னும் பெயருமுண்டாயிற்று. உத்தமோத்தமமாகிய அந்த ஸ்தலத்தில் ஒருவருஷம் வசிப்பவர்களுக்குப் பிறப்பினால்வரு மச்சமில்லை. இதனையாராயவேண்டாம். கார்த்திகைமாசத்தில் வருகின்ற சோமவாரம் சனிப்பிரதோஷம் சிவராத்திரி ஜன்மநக்ஷத்திரம் வியதிபாதம் மகோற்சவமென்னு மிவைகளிலே திவ்வியமான சித்ததீர்த்தத்தில் அன்போடு ஸ்நானஞ்செய்தவர்கள், கைலாசநாதர்

சித்திய கல்யாணியென்னு மிருவருடைய திருவருளால் எண்ணியவைகளெல்லா மெய்தப்பெற்று வாழ்வார்கள். இந்தக்கதையை மனமொருவழிப்படப் படிப்பவர்களும் கேட்பவர்களும் முடிவில்லாத சித்திகளையடைந்து பின்பு முதன்மையறிவுடைய சிவன் முத்தராவார்கள்.

சுபத்திரன் சித்திபெறுபடலம் முற்றிற்று.

---

நான்காவது.

## சூரன் றேவரைத் தேடவிட்ட படலம்.

இந்தப்பிரகாரம் அகத்திய முனிவர் சொல்லியருள, முனிவர்கள்கேட்டு, குடத்திலுதித்த முனிவரே, சித்த தீர்த்தத்தின் மகிமையை யருளிச்செய்தீர். மகிழ்ச்சியடைந்தோம். அந்தஸ்தலத்துக்கு இளைசையென்னும் பெயர் யாது காரணத்தாலுண்டாயது? அதிபரிசுத்தமான அந்தக்ஷேத்திரம் பூமியி லெவ்விடத்துள்ளது? அவற்றையெல்லாம் மனத்திற் பதியும்படி யருளிச்செய்யுமென்று வினவியதைக் கேட்ட அகத்தியமுனிவர் விரும்பி, பலவகைப்பட்ட மேன்மைசார்ந்த அந்தஸ்தலத்தின் மகிமைகளைச் சொல்லுவே னென்று அருளிச் செய்வார்.

சுத்தமுடைய நல்லோரை வருத்துங் கொடியவர்களாகிய அசுரர்களாலே நெருங்கப் பெற்றுக் கெடாத வாழ்வு மிக்கது; மாயாபுரமென்னும் பெயர்படைத்த

வளஞ்செறிந்த நகரமாம். அந்த நகரத்தி லிருந்து அர சாட்சி செய்பவன்: வச்சிரசரீரம் பெற்றவனும் விஷ்ணுவும்மயங்கத்தக்க வீரச்செய்கை யுடையவனும் எந்த மாயைகளிலும் மிக்கவனுமாகிய சூரபன்மனும். அந்தச் சூரபன்மன் வீரத்திற்சிறந்த தன்குமாரனாகிய பானுகோபனால் இந்திரனரசுசெய்த தேவலோகத்தைக் கட்டழிப்பித்துத் தேவர்களெல்லாங் கொடுந்துயரு றும்படி செய்தான். செய்தலும், இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் நெடுமூச்செறிந்து அவ்விடத்தை விட்டு விரைவாகநீங்கிப் பெருந்துயரத்துன் மூழ்கினவரா யிந்தப்பூமியையடைந்தார். துயரான்மயங்கி வன்மைகெடுந் தேவர்கள், தங்கடங்கள் சரீரத்தோடு பொருந்தியிருந்தால் எந்தவிடத்திலும் இடர்வரு மென்று நினைத்து இவற்றைச் செய்வார்கள், தேனீ எறும்பு ஞெண்டு மயில் கிளி கழுகு குரங்கு புலி பன்றி யானை முதலிய வெண்ணில்லாதவற்றின் வடிவங்களை யடைந்து பெருந்துயர்கொண்டு, சைய பருவத்தினின்றுந் தோன்றுங் காவேரிநதிக்கரைக ளிருபக்கத்தும் பொருந்திய சிவஸ்தலங்களிற் சேர்ந்திருந்தார்கள். சமீபத்திலிருப்பவரு மறியக்கூடாத நுண்ணிய வுருக் கொண்டதேவர்கள், மிகுந்த சிறுமையோடு மோரிடத்திலிருந்துகொண்டு இவ்வுண்மைகளைத் தங்களுட் சொல்லுகின்றார்கள். முக்கண் மூர்த்தியாகிய சிவபெருமானை விலக்கித் தக்கன்செய்த யாகத்திலே போய் அவ

Kailasanath Kaveri...

ளுேடு பொருந்தி யிருந்ததனுல் பெரும்பாவம் வந்தது. அந்தப்பாவத்தா லுண்டாய பயனுகிய இத்துன்ப மெல்லாம் எப்படியும் அநுபவித்தல் வேண்டும். எவ்வகைப்பட்ட கருமங்களினுலும் தவத்தினுலும் அந்தப் பாவத்தின் வன்மையை நீக்கித் தொலைத்திடல் கூடாது. உண்மையை விசாரித்துச் சொல்லு மிடத்தில், உய்யுநெறியை யுணர்த்துகின்ற தரும சாஸ்திரங்களிலுள்ளனவாகிய பிராயச்சித்த காண்டங்கள் எல்லாப் பாவங்களுக்கும் பிராயச் சித்தங்கள் செய்யும்படி விதித்தன. சிவபெருமான் விஷ்ணு பிராமண ரென்னு மிவர்களை யவமதி செய்தலா லுண்டாகும் பாவத்துக்கு அஞ்சிப் பிராயச்சித்தம் விதிக்கவில்லை. அறியாமையினுல் அல்லது விளையாட்டினுல் மெய்யுணர்ந்த விப்பிரர்களுக்கு அவமதி செய்யினும் அதனுல் எவ்வகைப் பட்டவர்களுக்கும் பெருங்கேடு விளையும். இது சாஸ்திரங்களி னுண்மை. இப்படியாயின், எல்லாவுலகத்துக்கும் முதற் காரணமாய் நல்ல குருவாய் இன்பநிலையிற் செலுத்துவோரா யுள்ளவர் மகேசுரபத வாச்சியரான சிவபெருமானன்றே? மூன்றுலகத்திலும் அந்தச் சிவபெருமானுக்கு அவமதிசெய்த மூடர் நிச்சயமாகவே துன்பமெல்லாம்வந்து மூடிக்கொள்ள நிற்பாரென்பதனை யெடுத்துச் சொல்லவும் வேண்டுமோ!! ஆதலால், நாங்கள் அவருக்குச் செய்த தீங்கு, எண்ணில்லாத பலகோடி கற்பபேதங்கள் சென்றாலும் அநுப

அவைகளாலே சூழப்பட்ட நகர மெல்லாந் தேடினேம். முனிவர்களாச்சிரம முழுதுந்தேடினேம். சிவஸ்தலங்களெங்குந் தேடினேம். மகாராஜாவே, இவ்வாறு நாங்கள் தேடியுந் தேவர்களைக் காணவில்லை. ஆதலால் தேவர்கள் பசிதாகம் மிகுந்து சரீரவன்மை நீங்கி வருந்தி யிறந்தார்கள்போலு மென்றார்கள். அந்த வார்த்தையைக் கேட்டு உடனே பானுகோபன் சொல்லுகின்றான், எம்பிதாவே, தூதுவர்கள் நன்று சொன்னார்கள். இந்திராதி தேவர்கள் இறந்தவரோ யாவர். நாம் முன்னரோயே தேவலோகத்தை யடைந்து கொண்டோம். இனியது நமக்கே யாகும். இது உண்மை. வழுவில்லாத நீதிவல்ல தூதுவர்களால் இந்திரனை யைத் தருவித்துக் குக்குடவிருத்தியாற் பலபோகங்களை யநுபவிப்பாயாகவென்றுசொன்னான். இந்தப்பிரகாரம் தூதுவர்களும் புத்திரனுஞ் சொல்லிய வார்த்தைகளைக்கேட்டு, நீதி நூற் றெளிவுள்ள புத்திமானாகிய சூரபன்மன் நன்று யாலோசித்துச் சுக்கிராசாரியனையும் சபையிலுள்ளவர்களையும் யார்த்துச் சொல்லுகின்றான். இந்திரன் முதலிய தேவர்களெல்லாங் கூர்ந்தபுத்தியுடையவர்கள். நீதிநூல்வல்லவர்கள் காலாகாலங்களின்வகை தெரிந்தவர்கள். குருவினாணைவழியினிற்கு மொழுக்கமுடையவர்கள். இன்ன வகையினரொன்று தெரியக்கூடாத நிலையுடையவர்கள். சகலநூற்பொருள்களிலும் வல்லவர்கள். முடிவில்லாத கேள்வி யுடைய

வர்கள். விபுதரென்று சொல்லும் பெயர்பெற்றவர்கள். சூரத்தன்மையினர்கள். அவர்கள் செல்லக்கூடாத தாகிய விடத்திலே எங்கேயோ வொளித்திருக்கின் றூர்கள். தாஞ் செய்யு முபாயச் செய்கை தெரியாத படி நம்மையடக்கும்முயற்சி யென்றுஞ்செய்வார்கள். இது சந்தேகமாகக் கொள்ளவேண்டாம். இந்தக் காரணத்தால், தேவர்களெங்கே யிருப்பார்கள் ஆரா புங்க ளென்றூன். தூங்குதலில்லாமை கல்வி துணிவு டைமை யென்னும் மூன்று தன்மையையும் நீங்காத சூரபன்மன் சொல்லிய வார்த்தையைக் கேட்டுத் தகுதி சேர்ந்தவரா யங்கிருந்த சுக்கிராசாரிய ரிவ்வாறு மனத் திலே மதிக்கின்றூர், தேவர்களுடைய நிலையைச் சொ ல்லுத லாகாதென்றூலும் அவைக்களத்திலே இறை வனு லேவப்பட்டோர் புத்திக் கேற்றபடி சொல்ல வே ண்டும். இது பண்டை தொட்டுவந்த தருமமாகு மெ ன்று மதித்துப் பின்பு அரசனை நோக்கிச் சொல்லு கின்றூர். வலிமை படைத்த அரசனே, தேவர்கள் மற்ற வர்களைப்போல விறக்கமாட்டார்கள். நன்றூய்த் தெ ரிதற்கு வாரார்கள், ஆராயுந் திரமுடையவர்கள். குறை வில்லாத வுணர்ச்சிவாய்ந்தவர்கள். வீரப்பாடுடைய வர்கள். தேசினுல் நிறையப்பெற்றவர்கள். தங்கள் கண்களாற் பகைவரை யெரிக்கத்தக்கவர்கள். அவர் கள் பூமியின்மேல் பெருமை பொருந்திய ஸ்தலங்களில் விலங்கு பறவைகளின் வடிவோடு மறைந்து வசித்திரிவ

றென்று என்னுள்ளம் மதித்த தென்றூர். அதுகேட்ட சூரபன்மன் அதிக மகிழ்ச்சி யடைந்து அறுபத்தாறு கோடியசுரர்களோடுவெக்கிரதமிஷ்டிரன் மகாதமிஷ்டிரன் கும்பாண்டனென்னுஞ்சேனுவீரர்களை நோக்கிச்சொல்லுகின்றூன். கூர்ந்த புத்தியும் வலிமையும் வெற்றியுமுடைய வசுரர்களே, கேளுங்கள். இப்பொழுதே நீங்கள் பெருஞ்சேனையோடும் பூமியிற்போய், சிறந்த ஸ்தலங்களையும் முனிவராச் சிரமங்களையும் எல்லோரு மஞ்சும்படியாக அழிவுசெய்து தீயூட்டி, பறவை விலங்குருவங் கொண்ட தேவர்களைப் பிடியுங்கள். அல்லது மிகுந்த வுபாயத்தாற் கொல்லுங்கள். அல்லது சுடுங்கள். சொல்லப்பட்டவைகள் எவற்றையேனுஞ்செய்து, இந்திராணி யெங்கேயிருக்கின்றூளென்று மனவூக்கத்தோடுநன்றாய் விசாரித்துக்கொண்டு விரைவில் வாருங்களென்று சமுத்திரம்போலு மசுரர்கூட்டத்தை யனுப்பிச் சூரபன் வீற்றிருந்தான்.

அப்பொழுது அந்த வசுரர்கள் அரசர்க்கரசனுகிய சூரபன்மனை வணங்கி விடைபெற்றுச்சென்று இவ்வாறு போர்க்கோல மமைகின்றூர்கள். பறைகளையடிக்க அதனுல் எவலாளர்கள் தெரிந்து பல தேர்கள் யானைகள் பதாதிகளையெல்லாங் கொண்டுவந்தார்கள். வந்தபொழுது, தேர்களுங் குதிரைகளும் யானைகளும் அசுரருமாகிய சேனைகள் அணிவகுப்படைந்தன. மிகுந்த வன்மையுடைய வீரர்களும் முன்னணிகளையெல்லாம் நீக்கித்

நகுதியான போரணிகள் நன்றாகவமைய இவ்வாறு செ
ய்வார்கள். பல நிறங்களுடையனவாயும் நல்ல வண்மை
யுள்ளனவாயும் புதியனவாயும் விளங்குங் கவசங்களைச்
சரீரத்திலிட்டார்கள். அம்பறாத்தூணிகளைப் பின்னே
தூக்கினார்கள். முன்கைத்தோற் கட்டுக்களைக் கையிற்
கட்டினார்கள். விரலுறைகளை விரலிலிட்டார்கள். திண்
மையுடையனவும் பெருமைபொருந்தநீண்டனவும் ஓசை
செய்யும் நாணையுடையனவுமாகிய விற்களைக் கையிலே
கொண்டார்கள். இவைகளெல்லாவற்றையு மமைத்துக்
கொண்ட வீரர்கள், கோபமிகுந்தவர்கள்; சிங்கம்போன்
ற வன்மையுடையவர்கள்; வெற்றிப்பாடு சிறந்தவர்கள்;
கொடியபோரிலே வல்லவர்கள்; சேனையினடுவே வந்தா
ர்கள். ஆண்மைமிக்க வீரர்கள் யானைகளிலேறினார்கள்.
குதிரைகளிலேறினார்கள். தேர்களிலேறினார்கள். இவ்
வாறேறியபொழுது சேனைகளெல்லாஞ் செல்ல நினைந்து
சமுத்திரம்போல வாரவாரித்தன ; தேர்களொலித்தன;
யானைகளொலித்தன ; குதிரைகளொலித்தன ; அசுரசே
னைகளொலித்தன ; பலவாத்தியங்களுமொலித்தன. இந்
தப்பிரகாரஞ் சேனைகள் பொலிவடைய வன்மைமிகுந்த
அசுரவீரர்களெல்லாம் பூமியின் கண்ணே சிவஸ்தலங்க
ளிலே தேவர்களைத்தேடு மூக்கத்தோடு புறப்பட்டுச்
செல்லுகின்றார்கள். செல்லுதலும்;அவர்களுடைய கா
ல்களினின்றுமெழுந்த பூதூளியானது சூரியனொளியை
மாற்றித் தேவருலகஞ்சென்றது. இந்த நிகழ்ச்சிகளை

யெல்லாம் தேவகுருவாகிய பிருகஸ்பதி பகவான்கண்டு தேவர்களெவ்வாறு உய்யப்போகின்றார்களென்று நினைந்து, திருவானைக் காவை யடைந்த தேவர்களிடத்திற் போய் அவர்கள் அன்போடு வணங்கச்சொல்லுகின்றார். சிவ க்ஷேத்திரங்களிலே விலங்காதியுருவங்கொண்ட வுங்கள் நிலையைச் சுக்கிராசாரியர் கூறச் சூரனறிந்து உங்களை யழிக்கும்படி மிகுந்த சேனைகளை விரைவிலனுப்பினான். அனுப்பிய மாத்திரத்தே பூமியும் வருந்தும்படி சமுத்திரம்போல வசுரசேனைகள் புறப்பட்டு இங்கேவருகின்றன, ஆதலால் இந்தஸ்தலத்தை விரைவில் விட்டு நீங்கி, கங்கையணிந்த திருமுடியையுடைய எம்பெருமானது திருவருள்வந்து சேரும்வரையும் எங்கேயாயினுமோடிப்போயிருங்கள். தேவதேவரும் அம்பிகாபதியும் ஆன்மாக்களுக்கு அபயங்கொடுப்பவருமாகிய சிவபெருமானை மனம் வாக்குக் காயமென்னுந் திரிகரணங்களினாலும் நீங்காத அன்போடு புகலடையுங்கள். அவ்வாறு நீங்கள் அடைக்கலம் புகுந்தொழுகும்பொழுது, துன்பநீக்கு மியல்பினராகிய அந்தச் சிவபெருமான் பகையியல்பின் உங்களுக்கு வந்தடைந்த அத்தீங்கைத்திருவுளத்துக் கொண்டருளுவார். அருளும்பொழுது, நீங்கள் முன்னேசெய்த பாவங்களெல்லாம் கெடும்படி திருவருள்செய்து முன்போல உங்களையெல்லாமடிமை கொண்டருளுவார், நன்மையை யுயிர்களுக்கு எக்காலமுமுதவுந்தன்மையாற் சிவனென்னுந் திருப்பெயர்சான்ற

முழுமுதற் கடவுளை யடைந்தவர்கள் யார் சிறுமை யுற்றார்கள்? ஆதலால் எவர்களுக்கும்புகலானஅந்தச்சிவ பெருமானை முறைப்படியடைவீர்களாயின் உங்களுக்கு எவ்வகையாலும் இன்பநலஞ்சேர்வது நிச்சயம் என்று சொல்லிப் பிருகஸ்பதி பகவான்மறைந்தார். இந்திரன் அவ்வார்த்தைகளைக்கேட்டான் ; உடனே பகைவர்களு டைய முழக்கத்தையுங் கேட்டான். சூரபன்மனுடைய சேனையினடுவேயெழுந்த பேரிவாத்தியத்தின் பேரொலி யைக்கேட்ட இந்திரன் செய்யத்தக்கது இதுவென்று தெரியாதவனாய்த் தேவர்களைநோக்கி யிவ்வாறு சொல் லுகின்றான். ஐயையோ யாதுசெய்வோம்? எங்கேபோ வோம்? விலங்குபறவைகளின் வடிவையெடுத்தும்பூமியி லிருத்தல் கூடாதிருக்கின்றதே? சிவத்துரோகஞ் செய் தமையால் துயருக்குக்காரணமாய்வந்த பாவத்தினாலு ண்டாகிய பயனிதுவோ? எந்தத்தவத்தரோனும் இதனை ச்சகிப்பார்களா? ஜகத்பிதாவாகிய சிவபெருமானே யெ ங்களைக்காத்தல்வேண்டும். எவ்வளவிற்பகைவர்களாகிய அசுரர்கள் வரமாட்டார்களோ அப்படிப்பட்ட விடத்து க்கு நாங்களெல்லாமோடுவோம். மனத்திலெழுந்த து ணிபிதுவேயாம் என்று சொல்லித் தேவர்களோடும் ஓடி ப்போய்க் கீரனூரை யடைந்து, அங்கே சிவபெருமானை யும் பிராட்டியையும் வழிபட்டுக்கொண்டிருந்த இந்திரா ணியையும் அழைத்துக்கொண்டு அந்தஸ்தலத்தைநீங்கி விரைந்தோடிப்போய்த் திருமெய்யமடைந்தான். சமீப

ஸ்தலங்களிலே அசுரர்தேடிக்கொண்டு வருதலைப் பிருகஸ்பதிபகவானாலறிந்தவிந்திரன், விரைவாக அந்தஸ்தலத்தைநீங்கியோடிச் சகிக்கலாற்றாத துன்பமடைந்தான். அவன் பக்கத்துச்செல்லுந் தேவர்களுந் துயருற்றார்கள். இந்திராணியும் வருந்திச்சோர்ந்தாள். சிவபெருமானுக்கு அபராதஞ்செய்தமையால்தேவர்களுடையசிறப்பியல்களெல்லா மழிந்துபோக, அதனால் பூவுலகத்து மனிதரோபோல மிகச்சிறுமையுற்று வருத்தமடைந்தார்கள். கதிகளில்விசேஷமுடைய தேவர்கள் சிவபெருமானை யிகழ்ந்தமையால் வந்தகுற்றத்தைப் பற்றுதலால் இப்படிப்பட்ட இழிந்ததன்மையை யடைந்தார்களாயின், மனிதர் செய்யின் அடையுந் துயர் எத்தன்மையதோ அறியோம்? பிரமகத்தி முதலிய பஞ்சமகாபாதகங்களைச் செய்தாலுமென்னை? மற்றையெந்தப் பாவங்களைச் செய்தாலுமென்னை? சிவபெருமானைநிந்தித்தலும் அதனை நினைத்தலுங் கேட்டலுந்தீமையே. தூரத்தினின்றும் வருதலால் வருத்த மடைகின்ற தேவர்களெல்லாம் இளைப்பினைச் சகிக்கலாற்றாதவர்களாய் ஆசாரியருடைய உபதேசமொழியை நினைந்து, ஆபத்துடையவர்களுக்குச் சிவபெருமானே யல்லது வேறு புகலில்லாமையைத் துணிந்துகொண்டு பரமசிவனை ஸ்தோத்திரஞ் செய்கின்றார்கள். மகிமைசிறந்த சிவபெருமானே நமஸ்காரம். ஆபத்துடைய ஆன்மாக்களுக்கு உறவே நமஸ்காரம். அடியார்களுடைய துன்பத்தை யொழிப்

பவரே நமஸ்காரம். தேவர்களுக்கு ஆதிதேவரே நமஸ்காரம். பசுக்களுக்குப் பதியாய் நின்றவரே நமஸ்காரம். மூலப்பிரகிருதியினின்றுந் தோன்றுகின்ற சாத்துவிகம் இராசதம் தாமதமென்னும் மூன்று குணங்களினாலே பிரமா விஷ்ணு உருத்திரனென்னுந் திரிமூர்த்திகளுதிக்கச்செய்து நித்தியமாய் நிலைபெற்றுநின்ற முதற்காரணப்பொருளே நமஸ்காரம். தேவரீருடைய திருநாமத்தை நினைத்தாவது திருவடியைத் தியானித்தாவது வழிபாடு செய்பவர்களது கடத்தற்கரும் பெருந்துயரைக்கெடுத்தருள் செய்கின்ற துர்க்காநாயகரே நமஸ்காரம். அந்தகாசுரன் மார்பைப்பிளந்தவரே, யமனைக்கொன்றவரே, முப்புரங்களை யெரித்தவரே, கஜாசுரனைச்சங்கரித்தவரே, அடியார்கள் துன்பநீக்குதலே செயலாக்கொண்டவரே, நல்ல கருணாமூர்த்தியே நமஸ்காரம். துன்பக்கடலிலழுந்திய அடியேங்களைக் கரையிற்சேர்த்தருளும். இப்பொழுது இந்த இளைப்பை யொழித்தருளும். தேவரீரைப் புகலாக்கொண்ட தமியேங்களை யேன் சோதித்தருளுகின்றீர்? தேவரீர் அருள் செய்யாது தாமசிக்கின் நாங்கள் சகிக்கமாட்டோம். பரமபதியே, தேவரீருடைய திருவடித் தாமரைகளின் மகிமையைச் சிறிதுமறியாத கொடியேஞ்செய்த வபராதம் அநேககோடி கற்பங்கண் முடிந்தாலும் முடிவதன்று. தமியேங்களிடத்திலே தயை வைத்து அவ்வபராதத்தைப் பொறுத்தருளும். அல்லாவிடில் எங்களுயிரை

நீக்கியருளும். பூமியையகழுகின்றவர்களுக்கு அந்தப் பூமியே பற்றுக்கோடா யிருத்தல்போலத் தேவரீருக் கபராதஞ் செய்த தமியேங்களுக்குத் தேவரீரோ புகலிடம். பழமையான மங்கலரூபியே நமஸ்காரம் என்று ஸ்தோத்திரஞ்செய்து வருந்துகின்ற தேவர்களெல்லா மோடிப்போய், சந்திரனையணிந்த சிவபெருமானுடைய திருவருணோக்கத்தினாலே, நைமிசாரணியம் போலப் பறவைகளும் மிருகங்களும் பிறவும் தங்களுள் விரோதஞ்சிறிதுமின்றி வாழுகின்ற புராதனவனத்துட் புகுந்தார்கள். புகுந்தமாத்திரத்திலே இந்திரன் முதலியதேவர்களுடைய பசிதாகமிளைப்பென்னு மித்துயரெல்லாம் சூரியனொளி முற்பட்ட பனிபோலத் தொலைந்தழிந்தொழிந்தன.

சூரன்றேவரைத் தேடவிட்ட படலம் முற்றிற்று.

---

ஐந்தாவது.

## அசுரர் புராதனவனம் புகுபடலம்.

இவ்வாறு பசி முதலியனவெல்லா மொழிதலும், தேவர்கள் யாவரும் ஒப்பொழிந்த தெளிவு மனத்தில் நிறைந்துலாவ மிகுந்த சந்தோஷம்பொங்க ஆச்சரிய முடையவர்களாய்த் தங்கள் மனத்திலே தோன்றியதைச் சொல்லுகின்றார்கள். எங்களுக்கிருந்த இளைப்பெல்லாம் நீங்குதற்குக் காரணம், இந்தவனத்தின் மகிமையோ அல்லது சிவபெருமானுடைய திருவருளோ

வென்று சொல்லிநின்றார்கள். நிற்றலும்,அவர்கள் சந்தேகமெல்லாம் நீங்கவும் பெருவாழ்வடையவும் அவர்களுண்ணுமமுதத்தினுஞ் சுவையுடையதாய் உச்சவோசையுடையதாய் அவர்கள் மகிழும்படி எம்பெருமானுடைய திருவாக்கு ஆகாசத்திலெழுந்து சொல்லியருளும். இந்திராதி தேவர்களே, கேளுங்கள். க்ஷேத்திரங்களுள் உத்தமமாய்ப் பாசத்தையகற்று மிந்தஸ்தலத்தில் நீங்கள் சிறப்போடு சிறிது சிந்தையுமின்றி வசியுங்கள். இந்தஸ்தலத்திலே நீங்கள் வந்தமாத்திரத்தே யுங்களுடைய துயரெல்லாமழிந்தன. நீங்கள் பத்தியோடு நம்மைச்செய்த ஸ்தோத்திரத்தா லுள்ளமிரங்கிய நமது திருவருளே இவ்விடத்திலுங்களை வரும்படி செய்தது. சிலகா லிந்தஸ்தலத்திலிருந்து நம்மையருச்சியுங்கள். இதற்குச்சமீபமான ஸ்தானத்திலே எண்ணில்லாதசோதியுடையதும் ஒருவருந்தேறாத வற்புதமுடையதும் சுயம்பிரகாசத் தன்மையுடையதுமாகிய நம்முடைய விலிங்கத்தை நம்முடைய வருளினாலே தரிசிப்பீர்கள். தரிசித்தமாத்திரத்தே, அந்தத்தரிசனப் பிரபாவத்தால், நீங்குதற்கருமையாய் நின்ற உங்கள்பாவமெல்லாம் நீங்கச்சுத்தராயங்கிருந்து சிலகாலத்திலே தேவலோகவாழ்க்கையை யடைவீர்கள். சூரனேவிய ஏவலாளர் இங்கும்வருவார்களானால் அவர்கள் போர்வலியைநாமகற்றுவோம். இனிப் பகைவாலுங்களுக்கொரு சிறிதும் அச்சமுண்டாவதில்லை. நீங்கள்செய்தஸ்தோத்திரத்தால்

யாரேனும் நம்மை யன்போடு துதிப்பார்களாயின் மிகு ந்தபாபிகளாயினும் அவர்களாபத்தைப்போக்குவோம். இது உண்மையேயாகும். நல்லமிர்தமாகிய இந்தவாகாய வாக்கைத் தேவர்கள்கேட்டு உரோமபுளகங்கொண்டு கைகளைச் சிரசின்மேலே கூப்பிப் பலகாலும்வணங்கிச் சோகமுதலியன வெல்லாமகன்று மேலாகிய இன்பக் கடலிலமிழ்ந்தினார்கள். கரையில்லாத பரமானந்தக்கட லிலாழ்ந்த தேவர்களெழுந்து, சிவபெருமானாலருளிச் செய்யப்பட்ட மகாலிங்கத்தை அந்தவனத்திலே தே டும்பொழுது, மிகுந்தவற்புதவுருவுடையதாயும் அநேக கோடி பூரண சந்திரர்கள் விளங்குதலையொத்த விளக் கமுடையதாயும் மனம் புத்தி கண்கள் நெகிழத்தக்க காட்சியுடையதாயும் பிரகாசித்த மகாலிங்கமொன்று வனத்தினடுவே தோன்றக்கண்டார்கள். அந்தச் சிவலி ங்கத்துக்குச் சமீபமான ஸ்தானத்திலே சிவபெருமா னால் நிருமிக்கப்பட்டதாயும் மிகத்தெளிந்த நீருடைய தாயும் மகாமுனிவர் குழாங்களினாலே நெருங்கியகரை யுடையதாயும் எவர்களும் விரும்புந்தன்மையுடையதா யும் விளங்கிய தடாகத்தையுங் கண்டார்கள். கண்ட மாத்திரத்தே சந்தோஷமடைந்து சங்கற்பஞ் செய்து அந்தத்தடாக தீர்த்தத்திலே விதிப்படி அகமருஷண சூக்தம் முதலிய மந்திரங்கள் சொல்லி ஸ்நானம் பண் ணி, தாங்கொண்டிருந்த விலங்கு முதலியவற்றின் வடி வங்களைநீக்கி நல்லவடிவங்களைக் கொண்டு, சரீரமெங்

குமழகுபெற விபூதியை யுத்தூளனமாகப்பூசித் திரிபு
ண்டரமணிந்து, உருத்திராக்ஷமாலையைப்பூண்டு, மூன்
றுவேதங்களுள் நடுவினதாகிய யசுர்வேதத்துள் நாலா
ங்காண்டத்துட் சிறந்த மகாருத்திரத்தினடுவே விளங்
கும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யிருடி நியாசம் முதலியவற்
றை முற்கொண்டு விதிப்படிசெபித்தார்கள். செபித்துச்
சுத்தராயெழுந்து, சிவபூசைக்காக வேதம் விதித்த வா
ணையின்படி தாமேபோய், வில்வதளங்களையும் பல
வேறுவகைப்பட்ட புஷ்பங்களையும் பழங்களையுங் காட்
டினின்றுங் கொண்டுவந்தார்கள். இவைகளையெல்லாங்
கைக்கொண்டபின் மற்றைய வுபகரணங்களையுமமைத்
துக்கொண்டு, மகாலிங்கத்தை யடைந்து கைலாசநாத
ஸ்வாமியைப் பூசித்தார்கள். இந்தப்பிரகாரமே இந்தி
ராதிதேவர்களெல்லாந் தினந்தோறும் கைலாசநாதஸ்
வாமியை வழிபட்டுக்கொண்டு சிறிது மச்சமில்லாது
சிலகாலமிருந்தார்கள்.

அப்படியிருக்கும்பொழுது, தேவராஜனாகிய இந்
திரன் ஆலோசித்து, நுண்ணிய நூல்களிலேவல்ல விசு
வகர்மாவை யழைத்து, இங்கேயொருநகரமும் கைலா
சநாதஸ்வாமியாலயம் முதலியனவும் அமைக்கக்கடவா
யென்று சொல்லுதலும், விசுவகர்மாவானவன் திருநக
ரமுந் திருக்கோயிலுமமைக்கின்றான். இரண்டுயோச
னை விசாலமுடையதாய்ப் பூமிக்கு அணிகலனென்று

சொல்லத்தகும் விளக்கமுடையதாய் நின்ற ஒருதிரு நகரத்தைச் சிறக்கக்கோலி, அதற்கு நடுவே கைலாசநா தஸ்வாமி யெழுந்தருளியிருக்கு மாலயமும், நித்திய கல்யாணியம்மையார் வீற்றிருக்குமாலயமும், விநாய கக்கடவுள் சுப்பிரமணியக் கடவுளென்னு மிவர்களு டையவாலயமும், மற்றைப்பரிவார தேவர்களுடைய வாலயமும், அருத்தமண்டபமும், மகாமண்டபமும், நிருத்தமண்டபமும், இன்னும் பலவகைப்படுமண்டபங் களும், யாகசாலையும், பாகசாலையும், திருக்கோபுரமும் திருமதிலும், கடைவீதியும், திருவிழாக்கொள்வீதியும் சித்திரகூடங்களும், முகப்புக்கள் நிலாமுற்றங்கள்விள ங்கும் பலவகை மாளிகைநிரைகளும், சபைகளும், பெ ருந்தவர்சாலையும், தக்ஷிணாக்கினி முதலிய மூன்றக்கி னிகளோடும் பசுபந்தன ஸ்தம்பத்தோடும் விளங்கும் யாகசாலைகளும், வேதாகமசாலைகளும், அன்னசாலைக ளும், பிராமணரிருப்பிடமும், க்ஷத்திரியரிருப்பிடமும், வைசியரிருப்பிடமும், சூத்திரரிருப்பிடமும், அநுலோ மர் முதலியோரிருப்பிடமும், வாவிகளும், ஓடைக ளும், மடுக்களும், கிணறுகளும், குளங்களும், பொய் கைகளும், சோலைகளும், தோட்டங்களும், நந்தனவன ங்களும் ஆகிய இவற்றையும் பிறவற்றையும் அமைத் தான். அவற்றைக்கண்டு தேவேந்திரன் மகிழ்ச்சியடை ந்தான். இந்திரன்முதலிய தேவர்கள் குழாத்தைவருத் திய இளைப்பையெல்லாம் ஆற்றியவுண்மையால் அந்த

நகருக்கு இளையாற்றங்குடியென்னுந் திருப்பெயருண்டாயிற்று.

இந்தப்பிரகாரந் தேவர்களெல்லாரும் இளைசைமாநகரத்தில் மனமகிழ்ந்து சிறப்போடு மிருக்குங்காலத்தில், சூரபன்மனுலேவப்பட்ட அசுரர்கள்யாவரும் தேவர்களைத்தேடிக்கொண்டு, பல க்ஷேத்திரங்களிலும் காவேரி நதிக்கரையிலும் ஆராய்ந்து, முனிவராச்சிரமங்களைக்கெடுத்தும், பிராமணர்களைக்கொன்றும், மிருகங்கள் பறவைகளையழித்துந்திரிந்தார்கள். இப்படித்திரிந்து தேடியுந் தேவர்களைக்காணுமையால் வருந்தி நின்றார்கள். அப்பொழுதுநாரதமகாமுனிவர் கலகமுண்டாக்கியசுரரைக்கொல்ல நினைத்து அங்கேவந்து அவர்களை நோக்கிச்சொல்லுகின்றார். அசுரவீரர்களே, நீங்களேன் தளர்ச்சியடைகின்றீர்கள்? இங்கே தேவர்களொருவருமில்லை. குற்றமில்லாத வுயிர்களையேன் கெடுக்கின்றீர்கள்? இப்பொழுது தேவர்களிருக்கும் ஸ்தானத்தைச் சொல்லுவோம் கேளுங்கள். புராதன வனமென்னும் பெயருடைய வனத்திலே இளைசை நகரமென வொருநகரத்தை விசுவகர்மாவமைத்தான். அந்த நகரத்திலே தேவர்களெல்லோரு மிருக்கின்றார்கள். அங்கே போங்களென்றுசொல்லிமேலேசென்றார். சூரனுடைய சேனுவீரர்கள் இளைசைமாநகரத்தைநோக்கி வருகின்றார்கள். சிங்கம்போன்ற அந்த அசுரவீரர்கள் சேனையோடு விரைவாகநடந்து நகரத்துக்குச்சமீபமாய்வந்து

யானை முதலிய மிருகங்களாலடர்ந்து நெருங்கிப் புறத்தேநின்றகாட்டையடைந்தார்கள். அந்தக்காட்டையோரரணமாகக் கொண்டு விளங்கும் இலிங்கையம்பதியின்கண்ணேயிருந்த தேவர்கள், நீலகண்டராகிய கைலாசநாதஸ்வாமிக்குப் பூசித்தலும்,ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச்செபித்தலும்,சதருத்திரமுதலியமந்திரங்களைப்படித்தலும், ஸ்தோத்திரித்தலும், நமஸ்கரித்தலுமாகிய இவைகளைச் செய்துகொண்டிருந்தார்கள். இருத்தலும், அசுரவீரர்கள் அவர்களுடைய நிலைமையைத் தெரிந்துகொண்டு யாரும் மயங்கும்படி யாரவாரித்து அந்தக்காட்டை வெட்டினார்கள். காடுவெட்டுமொலியும், தேரொலியும், யானையொலியும், குதிரையொலியும், வீரரொலியும் அண்டமுடையும்படி யெழுந்தன. அவ்வாறெழுந்த பேரொலியைத் தேவர்கள்கேட்டு உள்ளங் குலை குலைந்து, நித்தியகல்யாணி சமேதராகிய கைலாசநாதஸ்வாமியிடத்தி லடைக்கலம்புகுந்தார்கள். இந்திராதிதேவர்களெல்லாம் மகாலிங்கத்தினுடைய சந்நிதானத்திலே நின்றுகொண்டு, மாதாவினுந்தயையுடைய கைலாசநாதஸ்வாமியை ஸ்தோத்திரஞ்செய்கின்றார்கள். அடியார்களுக்காக விஷ்ணுமுதலிய வுருவங்களைக்கொண்டு துயரகற்றும் பெருமானே இரக்ஷித்தருளும். படைத்தல் காத்தல் அழித்தலென்னும் முத்தொழில்களை நடத்தும் வள்ளலே இரக்ஷித்தருளும். வாள் சூலம் தண்டம் முதலிய படைக்கலங்கள்வாய்ந்த திருக்கரங்களையுடை

யவரே இரக்ஷித்தருளும். உமாதேவியை வாமபாகத் துடையவரோ இரக்ஷித்தருளும். வன்கண்ணர்களைச் சங்கரித்தவரோ இரக்ஷித்தருளும். இடபவாகனத்தை யுடையவரோ இரக்ஷித்தருளும். புலிமுதலியவற்றின் றோலையுடையாகவுடையவரோ இரக்ஷித்தருளும். அடியார்களுக்கு ஏற்றபுகலிடமாய் நின்றவரோ இரக்ஷித்தருளும். எங்களையடிமையாகவுடையவரோ இரக்ஷித்தருளும். இன்பமேவடிவானவரோ இரக்ஷித்தருளும். பலவகையசுரர்களால் முன்னெங்களுக்குவந்த பெருந்துன்பமாகிய மலைக்குவச்சிரமாயிருந்தவரோ இரக்ஷித்தருளும். சர்ப்பமாகிய ஆரத்தையணிந்தவரோ இரக்ஷித்தருளும். சந்திரசூரியாக்கினிகளாகிய முச்சுடரான திருக்கண்களையுடையவரோ இரக்ஷித்தருளும் என்று ஸ்துதித்தலும், சந்திரசூடராகிய கைலாசநாதஸ்வாமியானவர், அப்பொழுதேயவர்கள் செய்தஸ்தோத்திரத்துக்கு மகிழ்ந்தருளி, அவர்கள் துன்பத்தைநீக்கத் திருவுள்ளமிரங்கியருளினர். இன்பமேயருள்செய்யும் எம்பெருமான், இப்பொழுதே நாம் வைரவவுருவத்தால் அசுரசேனையையழித்துத் தேவர்கள்துயரத்தைத் தீர்த்தருள்வோமென்று திருவுள்ளத்தெண்ணி யருள்செய்து, அசுரசேனையாகிய கடலையுண்ணும் வடவாமுகாக்கினியாகிய வைரவவடிவங்கொண்டருளுகின்றார்.அக்கினிச்சிகையொளி கான்றாற்போலச் சிரசிலே சிவந்த சடைபிரகாசிக்கவும், எவர்களு மஞ்சத்திருமுகத்திலே

உக்கிரமான மூன்று திருக்கண்கள்சுலாவவும், வக்கிர தந்தங்கள் இதழின்பக்கங்களிலேயொளிகாலவும்,நாவானது இரண்டு கடைவாய்களினுஞ்சென்று நக்கியுலாவவும், இரண்டு திருச்செவிகளிலும் குண்டலங்கள் அழகுசெய்யவும், திருப்புயங்களிலே கேயூரம்விளங்கவும், சூலம் வாள் கபாலம் யோகதண்டமென்னுமிவைகள் திருக்கைகளிற் பொருந்தவும், வச்சிராயுதம்போன்ற நகங்களொளிரவும், நாகயஞ்ஞோபவீதம் ஆரத்தோடு மார்பிலிலங்கவும், வாகனமாகக்கொண்ட வேதஞானி வலிகொள்ளவும், தாமேயமைந்த வெண்ணில்லாத வாபரணங்கள் திருமேனியிலேதுலங்கவும், பிரளயகாலத்தக்கினிபோன்ற திருமேனியொளி ஆகாயத்தொளியை விழுங்கி மேலெழவும், பூதம் பிசாசம்முதலியனவும் குரூரக்கிரகங்களும் பார்த்தமாத்திரத்தே வணங்கியகன்றுதொலையவும், சண்டமாருதத்தினும் வேகம்மிகவும், இடியேற்றினும் ஆரவாரம் அதிகரிக்கவும், பகைவர்கள்யாரையும் ஒருங்கேதகிக்கும் வெற்றிப்பாடுசிறக்கவும், அன்புடைய அடியார்களுக்குச் சேமநிதியாய்த் துயரெல்லாமகற்றும் பேரருட்குறிப்புவாய்க்கவும், முற்காலத்திலே பிரமாவும் விஷ்ணுவும் தம்முள்விரோதித்துப் பரம்பொருள் யாம்யாமென்று கலகஞ்செய்தபொழுது அங்கேயமைந்த வடிவம்போல இன்றுமமைந்து தோன்றி இந்திராதிதேவர்களைநோக்கி யருளிச்செய்கின்றார். தஞ்சமென்று நம்மைவந்தடைந்த தேவர்

களே, அசுரரால்வருமச்சத்தை அக்கினிவாய்ப்பட்ட பஞ்சுபோலக் கெடுத்தருளுவோம். இங்கே சிலநாளிருங்கள், கந்தவேள் அருள்கருதி யுலகத்தின்கண்ணே வந்துதோன்றியிருக்கின்றான். அவன் சூரபன்மனையும் சிங்கமுகாசுரனையும் தாரகாசுரனையும் விரைவிலே சங்கரித்து உங்களுக்கு மகிழ்ச்சிசெய்வான். அதனையறிந்துகொள்ளுங்களென்று அருளிச்செய்து, அசுரர்கெட்டொழியவும் தேவர் வெற்றிபெறவும் முயன்றருளினார். பின்பு வைரவக்கடவுள் விநாயகக்கடவுளோடு இளைசைமாநகரத்தைநீங்கித் தேவர்களெல்லாம் அகலாமே சூழ்ந்துவரத் தென்கீழ்த்திசையைநோக்கிநடந்து,பாதம் ஊன்றுதலாற் பூமியசையவும்,அட்டகாசத்தாலே திசைகள் செவிடுபடவும் இரண்டு கூப்பிடுதூரஞ்சென்று விநாயகக்கடவுளைநோக்கியருளிச்செய்வார். நம்புதல்வனே, நீகொடியசேனைகளையழிக்கக்கடவாயென்று பணித்தருள, விநாயகக்கடவுள் கோபித்து இந்திரனோடுஞ் செல்லவே அசுரசேனையோடியுத்தமுண்டாயிற்று. கண்டவர்களெல்லாம்மயிர்க்கூச்செறிந்து உடலயர்ந்து வருந்தி யகலும்படிசெய்யுமந்தப்போரின்கண்ணே விநாயகக்கடவுள் அசுரசேனையைவதைத்தருளினார். சகல தேவர்களாலும் சேவிக்கப்படுபவரும் உண்மையறிவானந்தவடிவினருமாகியவீசர்வடுகவடிவினராய்அசுரசேனை முழுதையுங் கோபத்திருநோக்கத்தாலழித்துத் தேவர்களை யிரக்ஷித்தருளினார். இந்தக்கதையைப் படிப்பவர்

களும் கேட்பவர்களும் பிணிகளெல்லாம்நீங்கி நல்ல செல்வத்தோடு மனத்தி லெண்ணியவைகளெல்லாம் முற்றப்பெற்று வைரவமூர்த்தி யருளினாலே யிறுதியில் மோக்ஷத்தை யடைவார்கள். இது உண்மை.

அசுரர்புராதனவனம்புகுபடலம் முற்றிற்று.

---

ஆறவது.

## அசுரசங்காரப்படலம்.

இந்தப் பிரகாரம் அகத்தியமுனிவ ரருளிச்செய்தலும், மகிழ்ச்சியடைந்த வசிட்டாதிமுனிவர்கள் இவைகளை விண்ணப்பஞ் செய்வார்கள். எல்லா முணர்ந்தவரே, தேவரீர்வாக்காகிய அமிர்தத்தையெங்கள் செவிகளாகிய பாத்திரங்களி லுட்கொண்டும் தெவிட்டிற்றிலோம். அடியார்கள் பத்திவலையினகப்படுகின்ற வைரவக்கடவுள் அசுரரை யெவ்வாறு சங்கரித்தருளினார்? விநாயகக்கடவுளும் எவ்வாறு பகைவரை மாய்த்தருளினார்? இவைகளைச்சொல்லியருளுமென்று விண்ணப்பஞ் செய்தலும், அகத்தியமுனிவர் அருளிச்செய்வார். எல்லாப் பொருளையுங் கொடுப்பதாயும் பரிசுத்தஞ்செய்வதாயுமுள்ள வைரவமூர்த்தி சரித்திரத்தைச் சொல்லுவோம். அதனோடு விநாயகக்கடவுள் இந்திராதியர்களோடு அசுரசேனா சமுத்திரத்திற்போய், அவர்கள் வலிமையை நீக்கிச்சங்கரித்த வகையையுஞ் சொல்லுவாம். ஒருமைப்பட்ட மனதோடு கேளுங்கள்.

விநாயகக்கடவுள் இந்திராதி தேவர்களோடு தொடர்ந்துபோய் அசுரசேனையின்மேலே யுருத்துச்செல்லுதலும், கொடியவசுரர்கள் தங்கள் சேனைகளை யணிவகுத்து வாள்முதலிய ஆயுதங்களைத்தாங்கிக் கடல்போல முழங்கிக்கொண்டு வந்தெதிர்த்துப் போர்செய்யத் தொடங்கினார்கள். தொடங்கி, வேற்படையை விட்டும் சூலப்படையைவிட்டும் விற்களினின்று மேவப்படும் பாணங்களைவிட்டும் போர்செய்தலும், விநாயகக்கடவுள் ஆயிரம்பதினாயிர மசுரர்களைநின்று போர்செய்துகொன்றார். மலைக்கோடுபோன்றதண்டம் இருப்புலக்கை முற்கரமிவைகளைத் திருக்கையிற்கொண்டு நின்று அசுரர்கூட்டத்தைச்சங்கரிக்கும் விநாயகக்கடவுளுடைய உக்கிரரூபமான துயுகாந்தகாலத்திலே அண்டரண்டங்களோடு பூதங்களையெல்லா மெரிக்குங் காலாக்கினி ருத்திரருடைய உக்கிரரூபம்போலும். விநாயகக்கடவுள் இவ்வாறு உலாவும்பொழுது, போரியல்புதெரிந்த தேவேந்திரன், அம்புமாரிகளைச் சிதறிக்கொடிய வசுரர்களை நாற்புறமுஞ் சூழ்ந்துநின்று தடுத்தான். ஆயிரக்கணக்கான பேருடலசுரர்கள் அகலாது நின்று போர்செய்தார்கள். அப்பொழுது இந்திரன் பலமுறை சங்கை வாயில்வைத்தூதிப்போர்செய்து அவர்கள் பேருடல்வன்மை நீங்கியொழியக் கொன்று, பிரளயகாலத்தேதோன்று மக்கினிபோலப் போர்க்களத்தில் விளங்கினான். பின்பு அந்தப் போர்முனையில், விநாயகக்கட

வுள் பாணமழைகளைப்பொழிந்து நின்று போர்செய்யும் பொழுது, எண்பதினாயிரம் யானைகளும், இலக்ஷந்தேர் களும், இலக்ஷங்குதிரைகளும் அவரம்பினாலே கொல் லப்பட்டிறந்தன. பத்துக்கோடி யசுரர்களிறந்து பூமி யிலழுந்தினார்கள். வாடித் துயரடைகின்ற வெஞ்சிய சேனைகளெல்லாம் பின்னிட்டோடத் தொடங்கின. போர்செய்யும் வன்மையில்லாது ஓடுஞ்சேனையைக் கண்டு கும்பாண்டனென்னுஞ் சேனை வீரன்றடுத்து நின்று சொல்லுகின்றான். அசுரகுலத்திலே தோன்றி னீர்கள். நல்ல வலிமையுடையீர்கள். அப்படிப்பட்ட நீங்கள் இப்பொழுது அச்சமடைந்து கவசத்தையும் வாள் பரிசை யிருப்புலக்கை மழுவென்னும் படைக் கலங்களையும் விட்டுவிட்டு ஏன் பின்னிட்டோடுகின்றீர் கள்? மானமுள்ளவர்கள் தங்களுயிர் நீங்கினாலும் போ ர்க்களம்விட்டு நீங்குவார்களோ! இதைமனசிலே துணி யுங்கள். நான்வருகின்றேன். போரிலே முயற்சிசெய்யுங் களென்று சொல்லிச் சேனைகளைத் திருப்பிக்கொண்டு நின்று சினத்துப் போர்செய்வான். வில்லைப் பலமுறை வளைத்து நாணிபூட்டி, விளக்கமுடையனவும் குறிவழி ச்செல்லுவனவும் கூர்மையுடையனவுமாகிய எண்ணில் லாத அம்புகளை அந்தவில்லிற் கொளுவி விநாயகக்கட வுண்மீது சொரிந்தான். கும்பாண்டன்சொரிந்த வம்புக ளெதிரே வரக்கண்ட விநாயகக்கடவுள், புன்முறுவ லுங்கோபமுங்கொண்டு, கூரிய அநேகபாணங்களை யெ

திராக விரைவிற்சொரிந்து, அவனுடலம் வருந்தும்படி செய்து, பின்பு அவனேறிய தேரையுஞ் சாரதியையுங் கொடியையுந் தேவர்கள் மகிழும்படி பொடியாக்கினர். தனது தேரழிந்தமாத்திரத்தில் மாயவன்மை மிகுந்த கும்பாண்டன்கோபங்கொண்டு மழுப்படை வாட்படை கண்டப்படையென்னு மிவைகளை விநாயகக்கடவுளு டைய தேர்மேலே தேவர்கள் வருந்திக்கலங்க ஆரவாரி த்து வீசினன். அவன் வீசியபடைக்கலங்கள் வேகத் தோடுவர; விநாயகக்கடவுள் அம்புமாரிகளைப் பொழி ந்து அவைகளைப் பொடியாகும்படிசெய்து அவனைச் சங்கரிக்கத் திருவுளங்கொண்டு, திருக்கையிலிருந்த அங் குசப்படையைக் கோபத்தோடு சுழற்றிவிட்டார். அந் தப் படைக்கலமானது விரைவிற்போய் அவனைச் சங் கரித்துத் திரும்பி அங்குநின்ற யாவரும் வியக்க விநாய கக்கடவுளுடைய திருக்கரத்தில் வந்திருந்தது. அது கண்ட சித்தர்களும் கந்தருவர்களும் முனிவர்களும் தேவர்களும் மனமகிழ்ந்து விநாயகக்கடவுளைப் போற் றினர்கள். இவ்வாறு கும்பாண்டனிறத்தலும், அவன் பக்கத்திலே சூழ்ந்த வசுரர்கள் ஓடத்தொடங்கினர்கள். அந்தச் சமயத்திலே வக்கிரதமிஷ்டிரன் மகாதமிட்டிர னென்னும் இரண்டு சேனைவீரர்களுங்கண்டு, ஓடுகின்ற வசுரசேனைகளை யோடாதபடிதிருப்பிக்கொண்டு, மிக்க கோபத்தோடு, கண்டவரெல்லா மஞ்சும்படி தேரின் மேலேறி, அறுபத்தாறுகோடி யசுரர்கள் பக்கத்திலே

நின்று பரவப் பெருவலியோடு போர்க்களத்தில்வந்து, கண்கள் அக்கினிப் பொறிசிதற விநாயகக்கடவுளைப் பார்த்துச் சொல்லுகின்றார்கள். அறிவில்லாதவனே நீயார்? வன்மையில்லாத வசுரர்களை யிப்பொழுது கொன்று நம்மை மதிக்காமல் மிகையுற்று நின்றாய் என்று சொல்லி, கொடுங்கோபத்தோடு வில்லிலே நாணியைப்பூட்டி ஓசைகாட்டி விநாயகக்கடவுண்மீது பாணமழைகளைப் பொழிந்தார்கள். அப்பொழுது அள வில்லாத அசுரர்கள் விநாயகக்கடவுளை யணுகி நான்கு புறமுஞ் சூழ்ந்துநின்று சூலம்முதலிய படைக்கலங் களை விட்டார்கள். கற்களையெடுத் தெறிந்தார்கள். மரங்களினு லெற்றினுர்கள். கைகளினு லடித்தார்கள் கூரியபாணங்களை வீசினுர்கள். இவ்வாறு அசுரர்க ளெல்லாம் விநாயகக்கடவுளைக் கடல்போலச் சூழ்ந்து நின்று போர்செய்தலைக்கண்டு, வைரவக்கடவுள் இதழ் துடிக்கக் கோபித்து, ஆலாகலன் சோமகன் அக்கினி முகன் காலவேகன் முதலிய பூதர்களையும் பூதசேனுதி பர்களையுஞ் சிருட்டித்தார். சிருட்டித்தலும், அவர்க ளெல்லோரும் வணங்கி நான்குதிக்கிலுஞ்சூழ வைர வக்கடவுள் விநாயகக்கடவுளை நோக்கி, நம்புதல்வனே, அசுரசேனையி லுள்ளவர்களை விரைவிற் சங்கரியாம னிற்ப தென்னையென்று சொல்லியருளி, நின்று போர் செய்வார். வைரவக்கடவுள் போரிலெதிர்க்கு மசுரர் சரீரங்களையெல்லாம் சூலப்படையினுற் கோதிப் பூமியி

லே வீழும்படி வீழ்த்தினர். வீழ்த்தும்பொழுது, வக்கிரதமிட்டிரன் விநாயகக்கடவுளோடு நின்றுபோர்செய்தான். மகாதமிட்டிரன் வைரவமூர்த்தியோடு நின்று போர்செய்தான். அங்கே தமது துதிக்கையினலே பதினுயிரத்தின் மேற்பட்ட வசுரர்களைப் பற்றிக் கோட்டினலே குத்தி வீழ்த்துகின்ற விநாயகக்கடவுள் நிற்குமிடத்தில் வக்கிரதமிட்டிரன் கோபித்து ஒருமலையைப் பிடுங்கிக் கொண்டுவந்து, இப்பொழுதே யிறந்துபோவென்றுசொல்லி அவர்மீதுவிட்டான். அந்தமலையானது வேகத்தோடு வருதலும், இடராகிய மலையைப் பிளக்கும் வச்சிரமாகிய விநாயகக்கடவுள் அங்குசப் படையை விட்டருளினர். அந்தப் படைக்கலமெதிரே சென்று அணுகிவரும் அந்த மலையையுடைத்து வலிமைகெடுத்தது. அந்த வங்குசப்படைக் கலத்தா லுடைக்கப்பட்ட கோணமுடைய மலையானது, கண்டோரெல்லா மதிசயிக்கும்படி நிழல்செய்யுமொரு மண்டப வடிவமாய் விநாயகக்கடவுளுக்கு மேலேயிருந்தது. இவ்வாறு தன்செயல் வீணுனமையாற் பங்கமடைந்த வக்கிரதமிட்டிரன் பெருங்கோபமுற்று, ஒருதண்டத்தை யெடுத்து வீசினன். வீசுதலும், கணபதியானவ ரதனைப் பார்த்துத் தமது திருவிளையாட்டால் அந்தத் தண்டத்தைத் துதிக்கையினலேபற்றி நின்று, அந்தப் படைக்கலத்தினலேயே யடித்து வக்கிரதமிட்டரனைக் கொன்றருளினர், வைரவக்கடவுளும் மகாதமிட்டிரனு

டைய மார்பிலே சூலப்படைக்கலத்தி னுனியாலே கொந்தித் தமதுதிருக்கையிலேந்தி யட்டகாசஞ் செய் தருளினூர். இந்தப் பிரகாரமே கும்பாண்டன் வக்கிர தமிட்டிரன் மகாதமிட்டிரன் என்னும் மூன்றுசேஞ வீரர்களுமிறக்க; அங்கே நின்ற வசுரசேனைகளெல் லாம் ஆலாகலன்முதலிய பூதர்களாலே தாக்கப்பட்டு உடைந்து, தேவர்களெங்கும் நின்றுஒட்டவோடிப் போய்ச் சூரபன்மனை யடைந்தன.

அதன்மேல் தேவர்களெல்லாம் பெருங்களிப் போடுநின்று ஸ்தோத்திரஞ்செய்ய; அருள்வாய்ந்த வை ரவக்கடவுளும் விநாயகக்கடவுளும் தாங்கள் செய்த போரிளைப்பு நீங்கத் தங்கள்பெயரால் இரண்டு தீர்த்தங் களைக் கற்பித்தார்கள். பின்பு அந்தத் தீர்த்தங்களின் கரையிலே பலவகையான ஜனங்களினுலே நிறையப் பெற்ற விரண்டு நகரங்களை நிருமித்துத் தமது கணங்க ளோடு அந்தத்தீர்த்தங்களிலே ஸ்நாநம்பண்ணி, கணங் களுந் தேவர்களும் பிரார்த்திக்க, இந்தத் தீர்த்தங்களி லே ஸ்நாநம்பண்ணுகின்றவர்கள் மகாபாபங்களி னிவி ர்த்தியும், எவ்வகையான சத்துருக்களையுங் கெடுத்த லும் நல்லபுத்திரப்பேறு முதலியனவும் பெற்றுக்கொள் ளச் செய்வோமென்று அருள்செய்து, இளைப்படைந் தோர்களுக்கு ஒருசேமநிதியாகிய கைலாசநாதஸ்வாமி யினுணையால் விநாயகநகரம் வைரவநகரமெனத் தங் திருப்பெயர்கொண்ட நகரங்களில் வீற்றிருந்தார்கள்.

விநாயகக்கடவுள் விநாயகதீர்த்தமென்னுந் தமது தீர்த் தத்துக்குச் சமீபஸ்தலத்தில் வக்கிரதமிட்டிரனாலே செலுத்தப்பட்ட மலையின் குகையிலே யமைந்த திருக் கோயிலிலே யெழுந்தருளியிருந்து அடியார்களுக்கு என்றும் நல்வரங்கொடுத் தருளுகின்றார். வைரவக் கடவுள் வைரவதீர்த்தமென்னுந் தமது தீர்த்தத்துக்கு முன்னே தென்றிசையை நோக்கித் திருக்கோயில் கொண்டருளித் தேவர்களும் மனிதர்களும் வணங்க வென்றைக்கும் வரங்கொடுத் தருளுகின்றார்.

அசுரசங்காரப்படலம் முற்றிற்று.

---

ஏழாவது.

## மயூரகிரிப்படலம்.

அசுரசேனை வீரர்களும் பிறரும் கைலாசநாத ஸ்வாமி திருவருளாலழிந்துபோகத் தேவர்கள் சமஸ்த ரும் இளைசைமாநகரத்திலெழுந்தருளியிருக்கும் நாய கனைவந்தடைந்து வணங்கி எண்ணில்லாதஸ்தோத்திரங் களை யங்கே நின்று செய்தார்கள். செய்தபொழுது, கைலாசநாதஸ்வாமி அந்தஸ்தோத்திரங்களுக்குத் திரு ச்செவிசாத்தித் திருவுளமகிழ்ந்து, அந்தத்தேவர் காணு ம்படி நித்தியகல்யாணியம்மையாரோடுங் காட்சிகொ டுத்தருளுவார். கைலாசம்போன்ற வெண்மையான முரிப்பும், மெல்லியபுலித்தோல் விரிக்கப்பட்ட முது

கும்; இரத்தினமழுத்திய பொற்கடிவாளம் பொருந்திய வாயும், கிங்கிணி கணகணவென்றோசை செய்யுங்கழுத்தும், சூலக்குறிசிறந்த வலமுற்காலுமுடைய மகாவிடபத்தின்மேல் வீற்றிருந்தருளி, திருச்சடையிற் கங்கையும் இளம்பிறையாகிய சிரோபூஷணமும் பொருந்த, நான்கு திருக்கரங்களிலே மானும் மழுவும் அபயமும் வரதமுமென்னுமிவைகள் சேர, நீலமணிபோன்ற திருக்கண்டம் விளங்க, கங்காநதியைச்சேர்ந்த காளிந்திநதியைப்போலச் சரற்காலத்துத் தோன்றுங் கோடிசந்திரர் போன்ற தமது திருமேனியினிடப் பாகத்திலே, கிளிபோன்ற பசியநிறமுடைய நித்தியகல்யாணியம்மை பிரகாசிக்க, வாக்குக்கும் மனத்துக்கு மதீதமான திருமேனிநலம் தரிசிப்போர் நோக்கத்தைக் கவர, இருக்கு முதலிய நான்கு வேதங்களும் திவ்வியரூபத்தோடு நின்று தம்முடைய புகழ்களைத் துதிக்க, அடியார்களை யிரக்ஷிக்குங் கடமைபூண்ட கைலாசநாதஸ்வாமி தேவர்களுக்குக் காட்சிகொடுத்தருளினர். அருளலும், அவர்கள் தரிசித்து முடிவில்லாத விருப்பத்தாற் பலதரம் பூமியிலே விழுந்து நமஸ்கரித்தார்கள். துள்ளியெழுந்தார்கள். கூத்தாடினர்கள். புகழ்ந்து பாடினர்கள். சிரசின்மேற் கைகளைக் கூப்பிக்கொண்டு இவற்றைவிண்ணப்பஞ்செய்கின்றார்கள். அறுகுணச்செல்வரே, தேவரீருடைய திருவருளினல் வைரவக்கடவுளும் விநாயகக்கடவுளும் தங்களுடைய கணங்களோடு நின்று அசுரர்

களையெல்லாஞ் சங்கரித்தார்கள். அவ்வாறு சங்கரித்த மையால் நாங்களடைந்திருந்த அச்சமெல்லாந் தீர்ந் தோம். இந்த க்ஷேத்திரத்தின் பிரபாவத்தால் எங்க ளுடைய பாவமெல்லாம் நன்றுயொழிந்தன. எம்பெரு மானே, எங்களுக்கு விரைவில் விண்ணுலகத்தைத் தந் தருளுவீர், ஆனல் பகையில்லாவிடினும், உண்மையாக வே விண்ணுலகத்து விருப்பமில்லை. நல்லலங்காரம் மிகுந்து வளங்களெல்லாம் பொருந்தி எல்லாராலும் புகழப்படுகின்ற இந்த விளைசைமாநகரத்திலே நாங்கள் நீங்காதிருந்து சகலலோகைக நாயராகிய தேவரீரை வழிபட்டுக்கொண்டு நீடூழியாண்டு வாழ்வோம். ஆனல் ஒப்பில்லாதவரங்கொண்ட சூரபன்மன் தன்னுடைய சேனைகளிறந்ததை யோடிப்போனவசுரர்களாற் கேட் டுக்கோபித்துத்தானே பகைமேற்கொண்டு விரைந்து வருவான். இது நிச்சயம். அவனுடைய வலிமையை படக்குதல் எவர்களாலும் நினைத்தலும் முடியாது. அத னல் நாங்கள் மிகவுமச்சமடைகின்றோம். கருணாநிதி யாகிய பகவானே, அவனுயிரைப் போக்குதற்கு உபா யஞ்செய்து தமியேங்களை யிரக்ஷித்தருளுமென்று வி ண்ணப்பஞ்செய்து நிற்க; கைலாசநாதஸ்வாமியானவர் அமுதத்தைச் செவியிலே வார்த்தல்போல அவர்களை நோக்கி யருளிச்செய்கின்றார். தேவர்களே யஞ்சாதொ ழியுங்கள், உங்களுக்கு க்ஷேமமுண்டாகும். நம்மிடத்தி லடைக்கலம் புகுந்தவர்கள் சிறிதேனு மச்சமடைவார்க

ளா? நம்மையெண்ணுது நம்மிடத்திலடைக்கலம் புகுந்தவுங்கள் வாழ்வினுக்குத் தீமைசெய்ய முயன்ருன் கொடிய சூரபன்மன். அவனைச்சங்கரித்தற்கோ ருபாயஞ்செய்தோம். அதனைச்சொல்லுவோம், கேளுங்கள். ஒப்பில்லாதவலிபடைத்த ஆறுமுகவனுகிய நம்முடைய குமாரனுல் அந்தச்சூரபன்மன் சகோதரரோடுங் கிளைகளோடு மிறப்பான். அவனேயல்லாமற் சூரபன்மனைச் சங்கரிக்க வல்லவர் யார்! இங்கே சொல்லப்பட்ட குமாரனும், நங்கண்ணிற் ருேன்றியதேசினின்றும் இமயமலைச் சாரலிலுள்ள சரவணத்தடாகத்திற் ருேன்றியிருக்கின்ருன். அவனை நீங்கள் சேனுதிபதியாக வரித்துக் கொள்ளுங்கள். அவன் நம்முடைய ஆஞ்ஞையினுலே சேனுதிபதியாயிருப்பான். அவனைக்கொண்டுபகைவரை வெல்லுங்களென்று அருளிச்செய்து குமாரக்கடவுளைத் திருவுள்ளத்திலே நினைந்தருளினுர். உடனே சரவண தடாகத்திற்ருேன்றிய குமாரஸ்வாமி அதனையறிந்து இருமுதுகுரவர்களையுங் காணுதற்காசைகொண்டு, நீலகிரியினிடத்தே தோன்றிய சூரியன்போல மயில்வாகனத்திலே யேறியருளி, தம்மாலுண்டாக்கப்பட்ட கணங்கள்சூழ இமயமலைச் சாரலினின்றும் வந்தருளினுர் கார்த்திகைப்பெண்கள் வளர்த்தலாற் கார்த்திகேயரென்னுந் திருப்பெயருடைய குமாரக்கடவுள், அனேயோசனை தூரத்தில் வருந்தன்மையைக் கைலாசநாதஸ்வாமி பார்த்தருளித் திருவுள்ளமகிழ்ந்து, அன்பினுலே திரு

முலைகள் பால்சொரியப்பெற்ற நித்தியகல்யாணியம்மை யாரோடும் இடபவாகன மேற்கொண்டு, தேவர்களெ ல்லாம் பக்கத்திற்சூழக் குமாரஸ்வாமியையடைந்தருளி ஞர். பிதாவும் மாதாவும் தம்மிடத்தேவருதல் கண்டு சுப்பிரமணியக்கடவுள் பெருமகிழ்ச்சியடைந்து மயில் வாகனத்தினின்று மிறங்கி, அவர்களுடைய பாதங்களி லே நமஸ்காரம்பண்ணினுர். பண்ணுதலும், குமாரஸ் வாமியைப் பிதாவும் மாதாவுந் தம்முடைய அருமைத் திருக்கரங்களினுலே யெடுத்துத்தழுவி யுச்சிமோந்து திருமடிமேல்வைத்துத் தனித்தனியே மகிழ்ந்து தமக்கு நடுவேயிருத்திஞர்கள். கைலாசநாதஸ்வாமிக்கும் நித் தியகல்யாணி யம்மையாருக்கும் நடுவே வீற்றிருக்குங் குமாரஸ்வாமியை யிந்திராதிதேவர்கள் சமஸ்தரும் நமஸ்கரித்து ஸ்துதித்துச் சந்நிதானத்திலே நின்ருர்கள். அப்பொழுது சிவபெருமான் கந்தஸ்வாமியை நோக்கி யருளிச்செய்வார். நம்முடைய குமாரனே, இந்தத் தேவர்கள் சூரபன்மனுக்கு அஞ்சி நம்மைப் புகலடைந் தார்கள். ஆதலால் இவர்களுக்குச் சேனுதிபதியாந் தன் மைபெற்றுச் சூரபன்மனேயும் மற்றை யசுரர்களேயும் விரைவிலே சங்கரித்து இவர் துயரையொழிப்பாயாக. இவ்விடத்திற்ருனே சேனுதிபதித் தன்மைக்காக இவர் களிப்பொழுது அபிஷேகஞ்செய்யப் பெறுவாய் ஐய னே யென்று சொல்லியருளினுர். அதுகேட்ட சுப்பிர மணியக்கடவுள் அவ்வாறேசெய்வேனென்ருர். அதனே

யறிந்து தேவர்கள் மிகமகிழ்ச்சியடைந்து இனிச் சூர பன்ம னிறந்தானென்றார்கள். பின்பு சிவபெருமானு டைய ஆணையால் மயில்வாகனத்தில் விளங்கும் கந்த ஸ்வாமியை யிந்திராதிதேவர்கள் சேனாதிபதியாகமதித்து அபிஷேகஞ்செய்து, விசாகனென்னுந் திருப்பெயர்கொ ண்ட குமாரஸ்வாமியை ஸ்துதித்து, ஆறுதிருமுகம் படைத்த பெருமானே, மகாபாபியாகிய சூரபன்மன் மிகவுமெங்களை வருத்துகின்றான். அவனைச் சகோதரர் புதல்வர் சூழ்பவரோடுஞ் சங்கரித்து எங்களுக் கருள் செய்யுமென்று விண்ணப்பஞ்செய்து நின்றிரந்துவேண் டுகின்ற தேவர்களுக்குக்கந்தஸ்வாமி நல்லருளைச்செய்ய; பிரமவிஷ்ணுக்களுக் கதிதராகிய கைலாசநாதஸ்வாமியா னவர், சத்தியெனப்படுகின்ற வேற்படையைக் கொடுத் துச் சூரபன்மனைச் சங்கரித்துவருவாயாகவென்று திரு வருள்செய்தார். உடனே வீரவீரராகிய கந்தஸ்வாமியா னவர் வேற்படையைப் பெற்றுக்கொண்டு தம்முடைய பிதாமாதாக்களுடைய திருவடிகளை வணங்கி, விடை பெற்றுக்கொண்டு, வீரவாகு தேவர் முதலிய கணங்கள் சூழ அவ்விடத்தை நீங்கி, தேவர்கள் போற்றி யாரவாரி க்கவும், பலவித வாத்தியங்கள் நெருங்கியாரவாரிக்கவு ம்,வீரர்களாரவாரிக்கவும், பிறசேனைகளாரவாரிக்கவும், ஆகாசமார்க்கமாய்ச் சென்று, சமுத்திரத்தைக் கடந்து போய், போரியன்ற பகைவர்கள் நெருங்கிய மாயாபுரத் தை யடைந்து, போருக்குவந்து நேர்ந்த தாரகாசுரனை

யும், மற்றையவசுரர்களையும், சிங்கமுகாசுரனையுங் கொ
ன்று, பின்பு பெருவரங்கொண்டுள்ள சூரபன்மனையுஞ்
சங்கரித்து, வெற்றிசூடி, வாத்தியங்களெங்கு மொலிப்
பத்தேவர்களெல்லாம் வியந்துதுதிப்ப வுள்ளேபோய்,
சயந்தனைச் சிறையினின்றும் நீக்கிக்கொண்டு மீண்டு,
தென்கைலாசமெனப்படும் இளைசைமாநகரமடைந்து, தம்
மைச் சூரசங்காரத்தின் பொருட்டனுப்பித் தாமும்
அவ்விடம் நீங்கிவந்து இன்னருளோடும் வீற்றிருந்தரு
ளிய கைலாசநாதஸ்வாமியையும் நித்தியகல்யாணியம்
மையாரையும் நமஸ்காரம் பண்ணிப் பெருமகிழ்ச்சி
யோடு சந்நிதானத்திலே தேவர்களெல்லாஞ் சூழநின்
றார். கைலாசநாதஸ்வாமி, அம்மையாரோடும் குமார
ஸ்வாமியை யெடுத்துத்தழுவி, நமதுகுமாரனே, நீ சூர
பன்மனைச் சங்கரித்து வந்தனையோவென்று வினவிய
ருள; கந்தஸ்வாமி தேவரீரருளாற் சங்கரித்தேனென்று
விஞ்ஞாபனஞ்செய்ய; கைலாசநாதஸ்வாமி அதுகேட்
டுத்திருவருள்செய்தார். அப்பொழுது இந்திராதி தேவ
ர்கள் கைலாசநாதஸ்வாமியிடத்திற் பிரார்த்திக்கின்றார்
கள். இந்த ஆறுமுகக்கடவுள் எந்தஸ்தானத்திலே
சேனாதிபதியாக எங்களாற் பட்டாபிஷேகஞ் செய்யப்
பட்டாரோ அந்தஸ்தானத்திலேயே வீற்றிருக்கும்படி
திருவுள்ளம் வைத்தருளுமென்று வணங்கினார்கள். கை
லாசநாதஸ்வாமி அதற்குத் திருச்செவிசாத்தித் திருவுள்
ளத்து நிறைந்த கருணையோடு கந்தஸ்வாமி அந்தஸ்தா

னத்திலே வீற்றிருக்கும்படி யாஞ்ஞைசெய்து, தேவ லோகச்செல்வமெல்லா மிந்திரனடையும்படி பேரருள் செய்தருளினர், உடனே இந்திரன்தேவர்களோடு தேவ தேவராகிய கைலாசநாதஸ்வாமியை வணங்கிஸ் துதிக்க; குமாரமூர்த்தி கைலாசநாதஸ்வாமியையும் நித்தியகல் யாணியம்மையாரையும் நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டு, புஷ்பமாரி பெய்யுந்தேவர்கள் சூழ மயில்வா கனமீது ஏறியருளி, தெய்வயானையம்மையார் வள்ளி யம்மையாரிருவரையுஞ் சிறக்கக்கொண்டு; அந்தவிளை சைமாநகரத்துக்குத் தென் கீழ்த்திசையை நோக்கி மூன்றுகூப்பிடு தூரத்திற் சென்று, சரவணப்பொய் கையெனத் தீர்த்த மொன் றுண்டாக்கி, தேவர்க ளோடு அந்தத் தீர்த்தத்திலே ஸ்நானஞ் செய்து, அதிலே ஸ்நானம் பண்ணுவோர்கள் முடிவில்லாத வரங்களைப் பெற்றுக் கொள்ளும்படி யருள்செய்து, மலையின்மீது கோயில்கொண்டு வீற்றிருந்தருளினர். செந்தாமரைகள் மலர்ந்தாற் போன்ற ஆறுதிரு முகங்களும், தெய்வரத்தின கிரீடங்களாறும், அடி யார்களுக்கு அருள்செய்யும் பதினெட்டுத் திருக்கண் களும், இரத்தினகுண்டலங்கள் விளங்காநின்ற பன்னி ரண்டு திருச்செவிகளும், வேற்படைமுதலிய படைக் கலங்கள் பொருந்திய பன்னிரண்டு திருக்கைகளும், பொன்னுத்தரீயந் துலங்குந் திருத்தோளடியும், கண்டி கையும் பூணநூலும் மலிந்த திருமார்பும், பொன்ன

டையணிந்த திருவரையும், பொன்போலப் பொலிந்த திருவடியும் பிரகாசிக்க, அழகிய மயில்வாகனமேற்கொண்டு, தேவிமாரிருவரும் இருபக்கங்களிலே மேவத் தரிசனஞ்செய்யு மடியார்களுக்கு எளிதில் நல்லவரங்களைப் பாலித்து வீற்றிருந்தருளுவார். இங்கே சொல்லப்பட்ட ஸ்தலமானது மயூரகிரியென்னுந் திருப்பெயரோடு என்றும் விளங்குகின்றது. அதுநிற்க, மனத்துயரெல்லாம் நீங்கி யுய்திபெற்ற இந்திரன், தேவர்களோடு சந்தோஷசாகரத்திலே யழுந்தி, அறிஞராயுள்ளவர்களாலே தியானிக்கப்படுகின்ற அரும்பொருளாகிய குமாரஸ்வாமியை வணங்கி ஸ்தோத்திரஞ் செய்கின்றான். வீரர்களுள் ஆதிவீரரோ ஸ்தோத்திரம். மகாமகிமையுடையவரோ ஸ்தோத்திரம். சிவபெருமான் களிக்கும் வடிவுடையவரோ ஸ்தோத்திரம். சோதிமயமானவரோஸ்தோத்திரம். அளத்தற்கரிய பராக்கிரமமுடையவரோ ஸ்தோத்திரம். ஆறுதிருமுகம்படைத்த பெருமானே ஸ்தோத்திரம். ஸ்தோத்திரம். அடியார்களுடைய துன்பத்தைத் தீர்த்தருளுபவரோ ஸ்தோத்திரம். சிவபெருமானுடைய அருமைத் திருக்குமாரரோ ஸ்தோத்திரம். கங்காநதியில் வந்து தோன்றியவரோ ஸ்தோத்திரம். மயூரகிரியின்மீது கோயில்கொண்டருளியவரோ ஸ்தோத்திரம். ஆறுதிருமுகம்படைத்த பெருமானே ஸ்தோத்திரம். ஸ்தோத்திரம். செம்மையாகிய நல்ல திருவருள்சிறந்த திருவுருவமுடையவரோ ஸ்தோத்திரம். எங்கள் கண்களிலிருக்

குழ் யணியே ஸ்தோத்திரம். தெய்வயானையம்மையார் வள்ளியம்மையாரிருவரும் நீங்காத கிருபாசமுத்திரமே ஸ்தோத்திரம். இந்த மயூரகிரியிற்றோன்றிய எம்பெருமானே ஸ்தோத்திரம். ஸ்தோத்திரம் என்று அன்போடு நின்று ஸ்துதித்து, விடைபெற்றுக்கொண்டு, தேவர்கள் சூழத் தேவலோகத்திற்சென்று, இந்திராணியோடு இன்புற்று வாழ்ந்திருந்தான். முனிவர்களே, திருவடியைப் பூசைசெய்த தேவர்களுக்குப் பேறுகொடுத்தருளிய கைலாசநாதஸ்வாமி மகிமையையும், அவர் எழுந்தருளியிருக்கும் நகரத்துக்கு இளைசையென்னும் பெயர்வந்த காரணத்தையும், அதனெல்லையையும், அடையாளத்தையும், வைரவநகரம் விநாயகநகரம் மயூரகிரியென்னு மிவற்றின் வரலாற்றையுஞ் சொன்னோம். இந்தப் பெருமையாகிய சரித்திரமானது எவர்களுக்கும் மிகுந்த பரிசுத்தத்தைக் கொடுக்கும். பாவமெல்லாம் போக்கும். சித்ததீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணிக் கைலாசநாதஸ்வாமியை நமஸ்கரித்துப் பர்வகாலங்களிலுமென்றைக்குமாவது இந்தச் சரித்திரத்தைக் கேட்பவர்களுக்குச் செல்வம் முழுதுஞ் சேருமென்று அகத்தியமுனிவ ரருளிச்செய்தார்.

மயூரகிரிப்படலம் முற்றிற்று.

---

எட்டாவது.

## கண்ணுவமுனிப் படலம்.

இவ்வாறு அருளிச்செய்ததுகேட்ட வசிட்டர்முதலிய முனிவர்கள், உலோபாமுத்திரைக்கு நாயகரே, கும்போற்பவரே, உம்முடைய முகமென்னுஞ் சந்திரனிடத்திலே யுண்டாகாநின்ற சரித்திரமாகிய வமிர்தத்தை நாங்கள் நன்றாகப்பருகியும் இன்னும் எங்களுள்ளந் தெவிட்டவில்லை. இன்னும் பருகவேண்டுமென்னு மாசைமனத்தைப்பற்றி நின்றுசெலுத்துகையால் கைலாசநாதஸ்வாமியின் மகிமையை யின்னுமருளிச்செய்யுமென்று போற்றி விஞ்ஞாபனம் பண்ணுதலும், அகத்திய முனிவரருளிச் செய்வார். வேதங்களை நன்றாயுணர்ந்த முனிவர்களே, கைலாசநாதஸ்வாமியின் மகிமையைக்கேட்க முயன்றமையால் நீங்களே பெரும்பேறுடையீர்கள். இளைசையென்னும் பெயருக்கு இன்னுமொரு காரணமுண்டு. அதனையுஞ் சொல்லுவோங் கேளுங்கள்.

முன்னொரு காலத்திலே கங்காநதிக் கரையிலே கண்ணுவரென்னும் ஒரு முனிவரிருந்தார். அவர் புருகுற்ச முனிவர் புத்திரர். திரிடுதச்சியுவின் சகோதரர். யோகத்தால் வன்மையடைந்த சரீரமுடையவர். கருமங்களெல்லாவற்றிலும் வல்லவர். மேலான தருமநிலைகளையுடையவர். வேதசாஸ்திர புராணங்களை முழுவது

முணர்ந்தவர். உபநிஷத்துக்களிலே போந்த பொருள் களைத் தேர்ந்தவர். சடாமண்டலம் முதலிய தவக் கோலச் சிறப்புடையவர். எல்லா நல்லியலுமமைந்து, தமது தருமத்துக்கேற்றபடி நிற்குங் கற்பிற்சிற ந்த பரானந்தை யென்னும் மனைவியோடும் பொருந்தி, அந்தக் கண்ணுவமுனிவர் கொடுந்தவஞ் செய்கின்றார். உணவைநீக்கி, மெய் முதலிய பொறிகளிடத்தேதோ ன்றும் பரிசம் முதலிய புலன்களையடக்கி, மோனமுத் திரையையுஞ் சின் முத்திரையையுங் கொண்டு, மூக்கு நுனியிலிரண்டு கண்களையும்வைத்து, பிராணவாயு அபா னவாயுக்களைத் தடுத்து, இதயகமலத்திலே, சோதியா யும், பரமாற்புதமாயும், பரமாகாசமாயும், போதமாயும், பரமானந்த வடிவமாயும், உயிர்க்குயிராயும், பரம்பொ ருளாயும் விளங்கும் பரசிவத்தை வேறுபாடறத்தியா னித்துத் தம்பம்போல வசைவற்றிருந்து நெடுங்காலம் பெருந்தவஞ்செய்தார். இவ்வாறு தவஞ்செய்யும்போது கடமை முதலிய எண்ணில்லாத விலங்குகள் வந்தணுகி யவருடைய சரீரத்திலே யுரோஞ்சித் தினவுபோக் குவன. அவருடைய சடைக்குகையிலே பறவைக ளானவை அச்சமின்றிக் கூண்டையமைத்து முட்டை களோடு மகிழ்ந்திருப்பன. யோகம்பயிலுகின்ற கண் ணுவமுனிவர், பிராணவாயுவை யிடைபிங்கலையென்னு மிருநாடி வழிகளிற் செல்லாமலடக்கி, நடுவிலுள்ள சுழு முனை நாடியிற் செல்லவிட்டு, இடையே தடுத்து முப

ற்சிசெய்ய; சிரசினின்றும் அக்கினிதோன்றி யாகாசபதத்தை விரைவிலடைந்து தேவர்கூட்டத்தை வருத்தியது. அப்படிவருத்துதலும், விண்ணுலகத்துக்குப் பதியாகிய தேவேந்திரன் இந்த வுக்கிரதவத்தி னக்கினிக் கிளர்ச்சியை நோக்கி மனம்வருந்தி, அந்தத்தவத்துக்கு இடையூறுசெய்யப் பலவகையா யாலோசித்து விரைவிலிவற்றைத் துணிகின்முன். கண்ணுவமுனிவர் தவஞ்செய்துகொண்டிருக்கும் ஸ்தானத்துக்குமுன் வாளொன்றுகிடக்கும்படிசெய்து பிராமண வடிவமொன்றும் அந்தப் பிராமணனைக்கொல்ல முயலுகின்ற சினப்புலிவடிவமொன்றுமாகிய இவ்விரண்டு வடிவங்களையும் மாயையினுற் கொண்டு, அங்கே யியலுவேன். பிராமணனைக் கொல்ல வருவது பார்த்தும், கண்ணுவமுனிவர், புலியைக்கொல்லமுயலாது சும்மாவிருப்பர். அப்பொழுது நாம் பிராமணனைப் புலியினுலிறக்கும்படிசெய்தால், அதனுல்வரும் பழியினுல் மனப்பந்தமுடையவராய் வருந்தித் தமது தவத்தினின்று மகன்றுவிடுவர் நம்முடைய கருத்தும் முற்றுப்பெறும். அல்லாவிடில் நம்முடைய பதத்தையவர் பெற்றுக்கொள்ளுவர். நம்முடைய வுயர்வுங் கெடுமென்று துணிந்து, கண்ணுவமுனிவருக்கு முன்னே ஒருவாள் கிடக்கும்படிசெய்து, ஒரு பிராமணவடிவும் ஒருபுலிவடிவும் மாயையினுலெடுத்துக்கொண்டு, கண்ணுவமுனிவருக்குச் சமீபத்திலேவருவான். சரீரமுழுதும் விபூதியணிந்தவனுயும்; உருத்திராக்ஷமாலை

பூண்டவனும், சிவசம்போ மகாதேவவென்று சொல்லுமொழியுமுடையவனும், நடுக்கங்கொண்டு நரைமிகுந்து திரைதலினாலே தோல்சுருங்கிப் பற்கள்கழன்று கண்கள்மயங்கிய வுருவமுடையவனும், தளர்ந்துதளர்ந்துதள்ளாடி யிடறுங்கால்களுடையவனும், புலியொன்று என்னைக்கொல்லவருகின்றது, ஐயோ! உம்மையடைக்கலமாக வந்தடைந்தேன். கருணைநிறைந்த அருந்தவரே என்னை இரக்ஷியும் இரக்ஷியுமென்று சொல்லிக்கொண்டு, கண்ணுமுனிவருக்குமுன்னே வந்தான் மாயப்பிராமணன். கண்களிரண்டும் அக்கினிபோலப் பொறிகளைச் சொரியவும், இடிபோலவாயினின்றுங் குமுறலோசை யுண்டாகவும், கால்களிலே நகங்கள் ஆயுதங்களைப்போல விளங்கவும், பாய்கின்ற மாயப்புலியானது, அந்தக் கிழப்பிராமணனைக் கொல்லப் பின்னே தொடர்ந்துவந்தது. கண்ணுவமுனிவர், பிராமணன் தம்மைவந்து அடைக்கலம்புகுந்ததையும், புலிதொடர்ந்து கொல்லவருவதையும் வாள்முன்னே கிடப்பதையும்பார்த்து, புலியினாலே தொடரப்படும் பிராமணன் நம்மிடத்திலேவந்து அடைக்கலம்புகுந்தான். குற்றஞ்செய்யாத புலியைக்கொல்லுதலும் பாவத்துக்கேதுவாமென்று ஆலோசித்துக் கொண்டிருந்தார். இருந்தபொழுது, மாயப்பிராமணன் எதிரேவந்துநின்று கைகளையுதறி நெடுமூச்சுமிகுந்தவனாய் இப்படித்தெரிவிக்கின்றான். கிருபாநிதியே. இன்றைக்குத் தேவரீரையடைந்

தேன். என்னுயிரைத் தந்திரக்ஷிசித்தற்கு வலியகொடும் புலியை இந்தவாளினலே வதைத்தருளும். இந்தப்பிரகாரம் என்னுயிரைத் தந்திரக்ஷித்தாற் புண்ணியமுண்டாம். சற்றும்பின்னிடலாகாது. இதனை மனத்திற்சிந்தித்தருளும். எவ்வகையிலும் உயிர்க்கொலை தீமையேயாயினும் என்னையிரக்ஷிக்கு மிந்தவகையிற்பாவமில்லை, இது உண்மையேயென்று சொன்னன். அந்தவார்த்தைகளைக்கேட்டுக் கண்ணுவமுனிவர் சும்மாவிருந்தார். முன் சினத்துக்கொண்டுவந்த புலியும் அந்தப்பிராமணனைக் கொல்ல விரைந்தது, அப்போது கண்ணுவமுனிவர் புலியைப்பார்த்து, புலியே, நல்ல இந்தப்பிராமணனைக் கொல்லுதல் பெரும்பாவம். இவனை நீ விரும்பாமல் விட்டுவிடு என்றார். அதுகேட்டபுலி சிரித்துக்கொண்டு இவைகளைச்சொல்லும். முனிவரே, இந்தப் பிராமணன் இன்றைக்கு எனக்குத் தெய்வவசத்தால் உணவாகக்கிடைத்தான். பிராமணனேயாயினும் வேறுயாரேயாயினும் எனக்கென்னை? இவனைக்கொன்றாற் பெரும்பாவமுண்டாகுமென்று சொன்னீர். அது உண்மை நூற் கருத்தன்று. பெரியவரே, உயிர்க்கொலை யெதுவாயினும் உமக்கேபெரும்பாவ முண்டாக்கும். கொலையையே யியல்பாகவுடைய எனக்கு அதுவே தருமமாகுமென்றுசொல்லி, தாமசியாது, இடியேறுபோலக் குமுறிக் கொண்டு அந்தப்பிராமணனைத் தொடர்ந்துபற்றியது. புண்ணியசீலரோ புண்ணியசீலரே காத்தருளுமென்று

கதறுகின்ற மாயப்பிராமணனைக் கண்ணுவமுனிவர் கொல்லாதேயென்று பலமுறையுஞ் சொல்லிவருந்தியிருக்க; அந்த மாயப்புலி பற்றியிழுத்துக்கொண்டு ஓரிடத்திற்போயிற்று. கண்ணுவமுனிவர் அதனைக்கண்டு, மிகவருத்தமடைந்து, நெடுங்காலமமிர்துண்டிருந்தவன் நஞ்சையுண்டாற்போலச்சோர்ந்துமயங்கி, உலகமும்பழிக்க இது என்னகஷ்டம்வந்து சேர்ந்தது என்றுசொல்லி யின்னுமிவைகளைச் சிந்திக்கின்றார். என்னிடத்தேவந்து அடைக்கலம்புகுந்த பிராமணனைப் புலிகொல்லவிட்டமையால் நெடுங்காலம்யான் வருந்திச் செய்ததவங்களின் பயனெல்லாமகன்று போயினவே! யாது செய்வேன்? நானோ கொலைசெய்தல் குற்றமென்னும் நூற்றுணிபைக் கடைப்பிடித்தேன். அடைக்கலம் புகுந்தவனை விடலாகாது. அவனைக்காக்கும் பொழுது மரணம்வந்தாலும் காக்கும் அந்தச்செயலை மறுக்கலாகாது என்று கூறும் நூற்றுணிபுக்கு விரோதமாய் முடிந்தமையால் மிகுந்தபாவம் வந்துவிளைந்தது. இனியிதனைக் குறித்து ஆலோசித்தலால் என்னாகும்? எந்த வெந்தவிடத்தில் எதுவெது நேரவேண்டுமோ அந்தவந்தவிடத்தில் அதுவதுநேரும். ஐயமில்லை. என்னிடத்திலே தங்கிய பாவமாகிய பெருந்தீமையை நீங்குதற்கு எங்கேனுந் தூரதேசத்துக்குப் போவேனென்று நினைந்து தம்முயிரையும் வெறுத்துத் துணிந்தெழுந்து, தம் பிதாவாகியபுருகுற்சனையும் முன்னவராகியதிரிடதச்சியுவையும்

நமஸ்கரித்துத் தமது பத்தினியாரோடும் துய்ரோடுஞ் செல்லமுயன்று, சிவபெருமான் மகிழும் கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்களிலும் காசிமுதலிய புண்ணிய க்ஷேத்திரங்களிலும் ஐந்து வருஷம்வரையுஞ் சஞ்சரித்து, பின்பு, வெண்ணாவலின் கீழே நீர்மேலுதித்த சிவலிங்கப்பெருமான் அடியவர்களுக்குப் புகலாக நல்லருள்செய்து விளங்காநின்ற திருவானைக்காவையடைந்து, அந்தஸ்தலத்துக்கு எதிரேயுள்ளதாய். அன்னமுங்காரண்டமும் நெருங்கியதாய், புண்ணியவடிவினதாய், மிகுந்த தூயநீருடையதாய், தன்னிருகரைகளிலும் சிவபெருமானும் விஷ்ணுவும் பிரகாசிக்கப்பெறுவதாய், ஐப்பசி மாசத்திலே கங்கைமுதலிய நதிகளிலும் உயர்வுடையதாய், நடுவே பிரகாசிக்கின்ற அரங்கநாதனை மாலைபோலச்சூழ்வதாய், பழமையுடையதாய், சையமலையினின்று தோன்றிப் பெருகுவதாய், சமுத்திரத்தோடு சங்கமமாகின்றதாய், தேவர்கணங்களெல்லாஞ் சேவிக்கும் பெருமையுடையதாய்ச் சிறந்த காவேரியைக்கண்டு பெருமகிழ்ச்சியோடு ஸ்நானம்பண்ணி முன்னேதம்மைத்தொடர்ந்த பாவங்களையெல்லாந் தம்வயத்தனவாக வெண்ணி, வெண்ணாவலடியிற் கோயில்கொண்டருளிய அகிலாண்டநாயகிக் கிறைவராகிய ஜம்புகேசுரப்பெருமானை வணங்கி ஸ்துதித்துத் தம்முடைய விருத்தாந்தங்களை விண்ணப்பஞ்செய்து நின்றார். பின்பு அந்தஸ்தலத்துக்குத் தெற்குத்திசையிலேசென்று, திருமுடி

மீது செங்கதிரையணிந்தவரும் சுகந்தகுந்தளையம்மை யாரோடு வீற்றிருக்கின்றவருமாகிய தாயுமானவனென் னுந் திருப்பெயருடைய சிவபெருமானைத் தரிசித்துவ ணங்கி ஸ்துதித்து, இவ்வாறு தமது மனசிலே சிந்திக்கி ன்றார். இந்த ஸ்தலத்துக்குத் தெற்கேபோய், அற்புத முடைத்தாகிய இராமேசுர க்ஷேத்திரஞ்சென்று, பிரம கத்தியை நீக்குவதும் மகா புண்ணியகரமுமான தனுக் கோடி தீர்த்தத்திலும், தேவர்களும் முனிவர்களும் யா வரும் சேவிக்கிறபதும், புண்ணியப்பயனைக் கொடுப் பதுமாகிய சேதுதீர்த்தத்திலும் அன்பினோடு ஸ்நானம் பண்ணி, இராவணனைச் சங்கரித்த பாவம்போகும்படி யிராமஸ்வாமியாற் பிரதிஷ்டைசெய்யப்பட்ட மகாலிங் கப்பெருமானைத் தரிசித்து, தேவர்களும் கந்தருவர்க ளும் சித்தர்களும் கின்னரர்களும் முனிவர்களும் பிற ரும் சேவிக்கப்பெறுவதாய், அளவில்லாத தீர்த்தங்க ளையுடையதாய் விளங்குங் கந்தமாதனபருவதத்தைத் தரிசித்து, அங்குள்ள தீர்த்தங்களையெல்லாந் தரிசித்து ஸ்நானம்பண்ணிப் பயன்பெறுவேனென்று நினைத்துவ ழிக்கொண்டு, தென்றிசைவழியிற் செல்லுகின்ற கண் ணுவமுனிவர், கோகர்ணமென்னும் க்ஷேத்திரத்தைய டைந்து, பெரியநாயகியம்மையாரையுங் கோகர்ணேசு ரரையுந் தரிசித்து வழிபட்டுக்கொண்டு, சத்தியகிரியா கிய திருமெய்ய மலையையடைந்து, சத்தியபுஷ்பகரிணி தீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணி, சத்திய கிரீசுவரரைந்

தரிசித்துவணங்கி ஸ்தோத்திரஞ்செய்துகொண்டு, அந்த ஸ்தலத்துக்குத் தெற்கேசென்று, பூர்வபுண்ணிய விசேஷத்தினலே புராதனவனத்தை வந்தடைந்தார்.

கண்ணுவமுனிப்படலம் முற்றிற்று.

---

ஒன்பதாவது.

## கண்ணுவமுனி பேறுபெற்ற படலம்.

சொல்லுதற்கரிய வியப்பினதாய் மிகமேன்மையதாய்ப் பெறுதற்கரிய அந்தப்புராதன வனத்தையடைந்த கண்ணுவமுனிவர், அந்தவனத்தைப்பார்த்துத் தெளிந்த மனமுடையவராய் ஆச்சரியமடைந்து, கற்பிற்சிறந்த மனைவியாரைநோக்கி இவைகளைச்சொல்லுவார். நங்கையே, இவ்வனத்தை வந்தடைந்தமாத்திரத்திலே நம்முடைய சரீரத்திலெழுந்த விளைப்பெல்லாமகன்றன. மனமுந் தெளிவுபெற்றது. இதற்குக் காரணந்தெரியவில்லையென்று சொல்லிச் சிந்தித்துநிற்றலும், பந்தமலங்களையெல்லாம் போக்கியருளுஞ் சிவபெருமான், பேரொலிபொருந்திய ஆகாயவாணியினல் அவர்மனமகிழ வருளிச்செய்வார். தவப்பெருஞ் செல்வமுடைய கண்ணுவனே கேள். இந்தப்புண்ணிய வனத்திற்புகுந்தமாத்திரத்திலே உனது பாவமொழிந்தன. இனி நீ செய்யவேண்டுவனவற்றைக் கட்டளை யிட்டருளுவோம். இந்த வனத்துக்குச் சமீபத்திலே திவ்வியமான சுயம்புலிங்கமொன்று பிரகாசிக்கும். அந்த இலிங்க

த்துக்கு முன் புண்ணியவடிவமான சித்த தீர்த்தம் பாவங்களையெல்லாங் கெடுத்து நன்மைகளைக் கொடுத்துக்கொண்டிருக்கும். அந்தத் தீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணி, மகாலிங்கபூசையை யன்போடு விதிப்படிசெய்து தரிசனஞ்செய்தலாற் சுத்தனாகக் கடவாயென்று தோன்றிய திருவாக்கைத் தம்மிருசெவிகளுங் குளிரக்கேட்ட கண்ணுவமுனிவர், கண்களினின்றும் ஆனந்த வருவிசொரிய உரோமஞ்சிலிர்ப்பப் பேரானந்தப்பெருங்கடலிலேமூழ்கி, அசரீரிவாக்கைப் பலமுறை பூமியில்வீழ்ந்து நமஸ்கரித்துச்சென்று, பெரியோர் வசிக்காநின்ற இலைசைமாநகரத்தை யடைந்து, ஆச்சரியகரமான அந்நகர்ச் சிறப்பையெல்லாம் பார்த்து, பின் நடுவே யிந்திரனாலே யியற்றப்பட்ட திருக்கோயிலுக்கு முன்னே சுத்தவடிவாய்விளங்குஞ் சித்ததீர்த்தத்தையடைந்து, மனத்தெளிவோடு சாஸ்திரவிதிப்படி சங்கற்ப பூருவமாய் மனைவியோடு ஸ்நானம்பண்ணிக் கரையேறி, இரண்டு வஸ்திரங்களைத்தரித்து, சாபாலோபநிஷத்து அக்கினிமுதலிய பொருளெல்லாம் பஸ்மமேயென்று சொல்லப்பெறும் விபூதியை விளங்கப்பூசி தேவர்களுடைய துயரத்தைக்கேட்டுச் சிவபெருமான் திருக்கண்களை மலர்த்திக்கொண்டிருக்க; அவைகளினின்றும்வந்த நீரிடத்திற்றோன்றிய உருத்திராக்ஷமணிகளாலே யமைந்த மாலையைச் சரீரத்திலணிந்து, பிராதக்காலத்திலே செய்யுங் கருமத்தைச்செய்து, மத்தியா

னத்திற் செய்யப்படுங் கிரியையும்முடித்து, தேவர்கள் இருஷிகள் பிதிர்கள் என்னும் மூவருக்கும் தருப்பை அக்ஷதையெள்ளோடுந் தருப்பணஞ்செய்து, பின்பு எழுந்துபோய், வனத்திலே கோமளமான வில்வதளங்களையும் பலவகைப் புஷ்பங்களையும் பழங்களையுங் கொண்டுவந்து, பஞ்சாமிருதம் பஞ்சகவ்வியம் செந்தேன் சந்தனம் தூபம் தீபம் நைவேத்தியமுதலிய பூசோபகரணங்களை யமைத்துக்கொண்டபின், பூசைசெய்யவந்து, மனம்வாக்குக் காயமென்னும் மூன்றையுங் கடந்த சிவபெருமான், தியானபூசைகளின் பொருட்டுக்கொண்டருளிய பஞ்சசாதாக்கியங்களுள் யாவரும் உய்யும்படிகொண்டருளிய கருமசாதாக்கிய ரூபமான மகாலிங்கத்தையடைந்து, பாதலத்தினின்றும் முளைத்து மேலே பொலிந்துதோன்றி நல்ல குளிர்ந்தவடிவோடுவிளங்குகின்ற கைலாசநாத லிங்கத்தைத்தரிசித்து, நேத்திரானந்தமடைந்து, பின்பு, திருமஞ்சனத்தாலபிஷேகஞ்செய்து, வஸ்திரஞ்சாத்தி, புஷ்பஞ்சூட்டித்தூபதீபங்காட்டி, நைவேத்தியம்பண்ணி பின்னேசெய்யவேண்டுவனவும்முடித்து, சிவபெருமானருளிச்செய்த வாகமவிதிப்படி சோடசோபசார முறையாகப் பூசைசெய்து, பின்பு இந்தப்பிரகாரமே பிரமாதிகீடம்வரையுள்ள வுயிர்களுக்கெல்லாம் மாதாவாய்நின்று அருள்செய்கின்ற அம்மையாரையும் பூசித்து, சந்நிதானத்திலிருந்துகொண்டு, சகலலோகைக நாயகனாகிய சிவபெருமா

னது வடிவமான ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைப் பதினாயிரமுரு வும், அருட்சத்தியாகிய தேவியினுடைய ஸ்ரீபஞ்சாக்ஷ ரியைப் பதினாயிரமுருவும் பசுத்துவமோசனத்தின் பொருட்டுச்செபித்தார். பின்பு நமகமெனப்பெயரியவு ருத்திரம்,சமகம், புருஷசூத்தம் ஏனைய சைவமந்திரங்க ளென்னு மிவைகளையுஞ் செபித்து, விநாயகக் கடவுள் வைரவக் கடவுளிருவரும் வீற்றிருக்கின்ற விநாயகநக ரம் வைரவநகரமிரண்டினும்போய், விநாயகதீர்த்த வை ரவதீர்த்தங்களிலே ஸ்நானம்பண்ணி, அந்தக்கருணாமூ ர்த்திகளிருவருக்கும் பூசைசெய்து, எந்நாளும் இவ் வாறேசெய்யும் நியமமுடையவராய்ப் பழத்தையுண்டு கொண்டு ஒருவருஷம்வரையும் இளைசையம்பதியிலிரு ந்தார்.

இப்படியே தம்முடைய பத்தினியோடு பன்னிர ண்டுமாசமும் வழிபட்டிருந்த கண்ணுவமுனிவர், பன் னிரண்டாவதுமாசத் திறுதிநாளிலே சூரியனுதிக்கமுன் னெழுந்து, சித்ததீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணி, நித் தியகருமங்களை முடித்துக்கொண்டு, திருக்கோயிலை யடைந்து, ஸ்வாமியையும் அம்மையாரையும் என்றை க்கும்போலப் பூசித்துச் சந்நிதானத்திலே ஸ்ரீபஞ்சாக்ஷ ரத்தைச் செபித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது, திருவருளுக்கிருப்பிடமாகிய அம்மையார் சந்நிதானத் திலிருக்குங் கண்ணுவமுனிவருக் கருள்செய்யத் திரு வுளங்கொண்டு, எண்ணமுடியாத விரதிகள் தம்முள் ஒ

ன்ருய்க் கூடியுதித்தாற்போன்ற திருவுருவங் கண்களை
க்கவரவும், சுவர்ணரத்தினுபரணங்கள் திருமேனியிற்
பொருந்தி யொளிகாலவும், சமுத்திரம்போன்ற கரு
ணையுடைய திருமுகமலரவும் விம்பத்திலின்றும் பிரச
ன்னமாய், தம்முடைய அருமைத்திருக்கையினுலே க
ண்ணுவமுனிவருடைய கையைப்பற்றிக்கொண்டு மகா
லிங்க சந்நிதானத்திலே நின்று பிரார்த்திக்கின்ருர். உல
கமுழுதுக்குந் திருவருள் செய்யும்பகவானே, கன்மஷ
மில்லாத இவனைச்சோதிப்பது அழகோ? எல்லாம்வல்ல
மங்கலரூபியே, இந்தக்கண்ணுவமுனிக்குக் கல்யாண
த்தை நன்கருளும். கல்யாணத்தை நன்கருளும். கல்யா
ணத்தை நன்கருளும். இந்தக்கண்ணுவன் மங்கலத்தை
யருளுந் தேவரீர் திருவடியிலன்புள்ளவன். இரக்ஷித்த
ருளும் என்று எம்பெருமாட்டியார் விஞ்ஞாபனஞ்செய்
தவாக்குத் திருச்செவியிற்சேர்ந்த பொழுதே, கொடிய
பிறவிக்கடலினின்று மெடுத்து எங்களை முத்திப்பெரு
வாழ்விற் செலுத்தியருளுங் கருணைக்கடலாகிய கைலா
சநாதஸ்வாமி தோன்றியருளுகின்ருர். கங்கையும் இள
ம்பிறையுஞ் சேர்ந்த திருச்சடையழகும், திருமேனியெ
ங்கும் பூசியதிருநீற்றின் சிறப்பும், உருத்திராக்ஷமாலை
யின் விளக்கமும், நாகயஞ்ஞோபவீதத்தின் பொலிவும்.
புலித்தோலுடையி னமைவும், கோடிசூரியப்பிரபை
யும், கோடிமன்மதர் கட்டழகுமுடைய ஒருதிருவடிவ
த்தோடு தோன்றி, அம்மையார் திருக்கரத்தைப் பற்

றிக்கொண்டு நின்றருளினர். அப்பொழுது கண்ணுவமு
னிவர்கண்டார். தெளிந்தகண்களைப் பெற்றதனுலுள்ள
பயனையடைந்தார். தமது பாசவலியையகன்றார். நீங்
காப் பெருமகிழ்ச்சிபெற்றார். இனிமேலவருக்கொருகு
றையுண்டோ? கண்ணுவமுனிவர், பரமானந்தசாகரத்
தினின்று மெழுந்து, அம்மையாருடைய திருக்கைப
டும் வண்ணம் பெரும்பேறுபெற்ற தமதுகையையுச்சி
மேற் கூப்பிநின்று, உரைதடுமாற என்பெல்லாம் நெக்கு
நெக்குருகப் பேரன்போடு ஸ்துதிக்கின்றார். நித்திய
மாயும், பராபரமாயும், நான்மறைப்பயனும், சுத்தப்
பொருளாயும், பரம்பொருளாயும், பிரமமாயும், உலகத்
துக்கிருத்தாவாயும், பரிப்பவராயும், தந்தையாயும் நின்
றசித்தவனநாயகரே, தேவரீருடைய திருவடிகள் ஸ்து
திக்கப்படுவன. ஸ்துதிக்கப்படுவன. ஆன்மாக்களுக்கெல்
லாஞ் சாக்ஷியாயும், உயர்வுக்குயர்வாயும், முத்திதாதா
வாயும், அனந்தசத்திமானும், சகலாகமங்களாலும் புக
ழப்பட்ட பாதுகையராயும்நின்ற சித்தவனநாயகரே,
தேவரீருடைய திருவடிகள் ஸ்துதிக்கப்படுவன. ஸ்துதி
க்கப்படுவன. ஞேயமாயும், ஞானமாயும், ஞாதிருவா
யும், பிரமா நாட்டரியவொளியாயும், அருள்விளையாடல்
விளக்கும்பதியாயும், சனந்தனதிமுனிவர் தொழுமின்
பச் சோதியாயும்நின்ற சித்தவனநாயகரே, தேவரீரு
டைய திருவடிகள் ஸ்துதிக்கப்படுவன. ஸ்துதிக்கப்படு
வன. காலமெல்லாங் கடந்தபொருளாயும், திரிபுரங்க

ரிலுள்ளவர்களுக்குக் கூற்ருயும், அந்தகனுக்கந்தகரா
யும், சந்திரகலாதாரியாயும், மங்கலசீலராயும், கதிகளை
அருளுஞ் செல்வராயும்நின்ற சித்தவனநாயகரோ, தேவரீ
ருடைய திருவடிகள் ஸ்துதிக்கப்படுவன. ஸ்துதிக்கப்
படுவன. சுயம்புவாயும், பெரியோர் வழிபட்டதேவரா
யும், வேண்டுவார் வேண்டியபடி வேண்டுவனவற்றை
யீந்தருளும் வள்ளலாயும், சத்திமயமாயும், மலநோய்தீர்
ந்தருளுந் தீர்த்தனுயும்நின்ற சித்தவனநாயகரோ, தேவரீ
ருடைய திருவடிகள் ஸ்துதிக்கப்படுவன. ஸ்துதிக்கப்
படுவன. எவளையொருத்தியென்றும், பிரகிருதியென்
றும், புராணியென்றும், நாநாவித வித்தையென்றும்,
விசுத்தையென்றும், விபுதர்தொழும் பதத்தியென்றும்
மலங்களைக்கடந்த சிவபரஞ்சுடருக்குத் திருவுருவென்
றும், நல்லோர் சொல்லுகின்ருர்களோ; அவளாகிய
பரமபதநிலையுடைய பராபரையே, உன்னுடைய திரு
வடிகள் ஸ்துதிக்கப்படுவன. உண்மையறிவானந்த வடி
வினளாயும், பரவித்தையாயும், நிருமலையாயும், பரமான்ம
வடிவினளாயும், ஸ்தாவரஜங்கமரூபமான எண்ணில்லா
தவுலகமுழுது மிடையீடின்றி வியாபித்து நின்ருளெவ
ளோ; அவளாகிய அகண்டானந்தவுருவத்தவளே, உன்
னுடைய திருவடிகள் ஸ்துதிக்கப்படுவன. எவள் எண்
ணில்லாத கற்பபேதங்களிலே பாசத்தாலே மூடுண்ட
சகலலோகங்களையும் படைத்தல் காத்தலழித்தலென்
னும் முத்தொழில்செய்து, அவற்றுக்கு வேருய், பரம

சிவனுடைய அருளே தனக்குரியவடிவமாச் சோதியாய் நின்றாளோ; அவளாகிய பரசிவையே உன்னுடைய திருவடிகள் ஸ்துதிக்கப்படுவன. பெருமையுடையவளும், பெருந்தலைமையுற்றவளும், எல்லாம் வல்லவளும் உயிர்களுக் கின்னருள்செய்பவளும், மாதாவுமாய்நின்ற எவளுக்கு முனிவரெல்லாம் வந்தனை செய்கின்றார்களோ; அவளாகிய பாசிவையானதேவியே உன்னுடைய திருவடிகள் ஸ்துதிக்கப்படுவன. உலகங்களெல்லாம் எவளுடைய சிருட்டியா யிருக்கின்றனவோ; அவையாவும் எவளுடைய திருவருளால் விளங்குகின்றனவோ; அவை முழுதும் எவளுடைய ஆதாரந் தலைக்கொண்டிருக் கின்றனவோ; அவளாகியருளுகின்ற பரசிவையான தேவியே, உன்னுடைய திருவடிகள் ஸ்துதிக்கப்படுவன. நித்தியமான வின்பநிலையுடையவளே, அடியவர்களுக் கின்பந்தருந் திருவருளுடையவளே, கைலாசநாதஸ்வாமிக்குத் தேவியானவளே, விரும்பிய பொருட்பேறளிக்குந் தயாவுடையவளே, வன்மனத்தையுடைய தமியேனுக்கமைந்ததிருவருளே, உன்னை வணங்குகின்றேன் என்று முன்னின்று ஸ்தோத்திரஞ் செய்து, முதிர்ந்தவன்பு உள்ளத்தினிறைந்து பொங்கி யிருகண்களின் வழியே வழிகின்றாற்போல வானந்தவருவி சொரிய வானந்தக்கூத்தாடி நின்றார். அந்தச்சமயத்திலே, வேதநாயகரும், வேதியர் நாயகரும் (உமை) மாதிநயகரும், மாதவர்நாயகரும்,

ஆதிநாயகரும், ஆருயிர்நாயகருமாகிய கைலாசநாதஸ்வாமியானவர், கண்ணுவமுனிவருள்ளங்களிக்க இவ்வாறு அருளிச்செய்வார். கண்ணுவனே, உன்னுள்ளத்திலே நிறைந்த அன்பினுண்மையால் யாம்மகிழ்ச்சி யடைந்தோம். இனிநீயச்சமடையவேண்டாம். சொல்லுவோம்கேள். நீ தவஞ்செய்துகொண் டிருக்கும்பொழுது, தேவேந்திரன் தான்பெற்ற சுவர்க்கபதந்தவறிப் போகுமென்று நினைத்து நடுக்குற்று வருந்தி, பின்பு, புலிவடிவமும் பிராமணவடிவமுங் கொண்டு, புலி பிராமணனைப் பற்றுதல் முதலிய மாயையையெல்லாஞ் செய்தான். தருமமென்று சொல்லப்படுகின்றவைகளெல்லாவற்றினும், கொல்லாமை யொன்றே யுயிர்களுக்குறுதியாயுள்ளது. அதனையொத்த நன்னெறி வேறொன்றில்லை. அந்தத்தன்மையை யறிந்தா யாதலால், முன்னேகிடந்த வாளினால் உயிர்க்கொலை செய்யாது கொல்லாமையாகிய பேறறத்தைப் பேணினாய். இதனால் உனக்கொரு தீங்குவந்ததில்லை. பிராமணனுயிரைக்கொன்றது பொய்யேயாயினும், அதனை நீ கண்களினாலே கண்டாய். அது துன்பத்துக்கு ஏது வாதலாற் பாவமாய் முடிந்தது அத்தன்மையதாகிய பாவத்தின் வன்மையானது, இந்தஸ்தலத்தை யடைந்தமையாலும், இந்தச்சித்த தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தமையாலும், நமதிலிங்கத்தைப் பூசித்தலாலு மழிந்தது. உனக்குமங்கலமுண்டாகுக. உன் மனசிலே யெண்ணியவரங்களை வே

ண்டக்கடவா யென்றருளிச்செய்ய, கண்ணுவ முனிவர் கைலாசநாதஸ்வாமிசந்நிதானத்திலே விநயத்தோடுமஞ் சலியஸ்தராய் நின்றுகொண்டு இவற்றைவிண்ணப்பஞ் செய்வார். தேவதேவரே, தேவரீரைத் தரிசித்தலால் இங்கே பெறற்கரும் பயனையெல்லாமடைந்து கொண் டேன். கருணாநிதியே, இனிநான் வேண்டிப் பெற்றுக் கொள்ளவேண்டுவ தொன்றுமில்லை. ஆயினும், உலகங் களுக்கெல்லாம் பிதாவாய் மாதாவாகிய அம்மையா ரோடும் நின்றருள் செய்யுந்தற்பரரே, சில வரங்களை வேண்டுகின்றேன். அருள்சுரந்து அளித்தருளும். மா தாவாகிய தேவியார் அழியாத வின்பமாகிய நித்திய கல் யாணமெனக்குத் தரும்படி வேண்டிக்கொண்டமையா ல் நித்திய கல்யாணி யென்னுந் திருப்பெயரை யடை யவேண்டும். இந்தஸ்தலத்தை யடைந்தமாத்திரத்தே என்னுடைய இளைப்பெல்லா மகன்றமையால் இளசை நகரென்னுந் திருப்பெயரை இந்தஸ்தலத்துக்கு யாவ ருஞ்சொல்லுக. முன்னாளிலே எல்லாப்பாவங்களையும் போக்கி வினைப்பகை கெடச்செய்யும் மங்கலகரமான திவ்விய கங்கையிலே விதிப்படி யெந்நாளும் ஸ்நானஞ் செய்துகொண்டிருந்தேன். முதல்வரே, அந்தக் கங்கை யின் கரைக்குப்போக விருப்பமெழுகின்றதில்லை. இப் பொழுது சேது யாத்திரைக்காகப் புறப்பட்டேன். அங் கேசெல்லுதற்கும் மனமெழவில்லை. எங்கணாயகரே, தீர் த்தங்களெல்லாம் வழிபாடு செய்யும் கங்கையையும்

சேதுவையுமழைத் துங்கேயமைத்தருளும். இவ்வரத்தைத் தந்தருளினால் எனக்கு வேறொரு குறையுமில்லையென்று விண்ணப்பஞ் செய்தலும், சந்திர சூடராகிய கைலாசநாதஸ்வாமி அவற்றை யெல்லாந்தந்தோமென்றுஅருளிச்செய்து, பின்னர், கங்கையையுஞ்சேதுவையுமழைத்துச்சிந்த தீர்த்தத்துக்கு மேல்பாகத்திலே தடாகமாயிருக்கும்படி யமைதருளினார். சொல்லப்பட்ட சேதுவுங்கங்கையுமாகிய விரண்டும் நித்தியகல்யாணி சமேதராகிய கைலாசநாதஸ்வாமி திருவருளாலே தடாகவடிவாய்ச் சேதுகங்கையென்று சொல்லப்படுந் திருப்பெயர்கொண்ட தீர்தமாய் மகிமையோடும் எக்காலத்திலு மிருக்கின்றன. தவத்திற்சிறந்த முனிவர்களே! அந்தச்சேது கங்காதீர்த்தத்திலே ஸ்நானம் ஜபம் தானமென்னு மிவைகளைச்செய்யில் ஒன்று அநந்தமாய்ப் பயனைத்தரும். இவ்வாறு சேதுகங்கை வந்து சேர்ந்ததனைக் கண்ணுவமுனிவர் கண்டுமகிழ்ந்து, பின் வேதவிதிப்படி சங்கற்பபூர்வமாக ஸ்நானம்பண்ணினார். அவ்வாறு பண்ணியெழுந்த கண்ணுவ முனிவரைக் கைலாசநாதஸ்வாமி திருக்கண்சாத்தி, வேதங்கள்தோன்றிய தம்முடைய அருமைத்திருவாக்கினாலருளிச்செய்கின்றார். அன்புடையகண்ணுவனே! சொல்லுவோம் கேள். புண்ணிய க்ஷேத்திரமாகிய இந்தஸ்தலத்திலே உன்மனைவியோடும் என்றைக்கும் வசிக்கக்கடவாய். பத்திமார்க்கத்திலே பதிந்து ஞானச்சோதியாகிய நமது

அன்பேயுருவமாய் உண்மைதெரிந்து சீவன்முத்தனுகி யின்பத்தோடு மகிழ்ந்துவாழுக. ஒன்றையடைதல் அடையாமையென்னு மிரண்டினும் ஒரு தன்மையாயிருந்து கொண்டு, துவந்துவதுக்கமும் அவ்வியமுமின்றி, உயிர்க்குயிராய் ஏகமாயிருக்கின்ற பரம்பொருள் நாமென்றெண்ணிச் சோகம்பாவனைத் தொடர்போடுங்கூடி மோகத்தின் பாற்படுதலில்லாவகை முயலக்கடவாய். புண்ணியக்ஷேத்திரத்திலே ஒரு தருமத்தைப் பேணிச் செய்தால் அது ஒன்று கோடியாகும். அங்கே செய்யும் பாவமும் அவ்வாறே யொன்றுகோடியாகும். ஆதலாற் கங்காதீரத்திலே நீபெற்ற பாவமுங் கோடியாம். அது பொய்யேயானுலும் எண்ணில் பிறவிகளிலே யநுபவிக்கப்படுவ தொன்றேயாம். இந்த ஸ்தலத்தில் எக்காலமுமிருந்துகொண்டு, சித்ததீர்த்தத்திலுஞ்சேது கங்கையிலும் ஸ்நானம்பண்ணி, நித்தியகல்யாணியையும் நம்மையும் பத்திபண்ணி, அப்பாவத்தைப் போக்கக் கடவாய். பிராரத்தத்தால் வருமின்பத்தையுந் துன்பத்தையு மநுபவித்து, ஐம்புலவன்மைகளை யகன்று, தூய்மையால் இருவினையையுங் கெடுத்து, மும்மலங்களாலே பொதியப்பட்ட பொய்யுடலழியுங் காலத்திலே பொறிமுதலியவற்றையெல்லாம் அவ்வவற்றிற்குரிய காரணங்களிலே யொடுக்கச்செய்து, உபாதிவசத்தைநீங்கி, எங்குமவியாபகமாய், மெய்ப்போதவடிவாய், எல்லாவற்றுக்குஞ் சாக்ஷியாயழிவற்றுயர்ந்த

நம்முடைய நன்னிலையை யடைவாய். முனிவனே! பிரமா விஷ்ணுமுதலிய தேவர்களும் வாழ்த்தும்படி அத்துவிதானந்த வகண்ட ரூபத்தைத் தியானித்து ஒப்பில்லாது வாழ்வாயாக வென்று திருவருள்செய்து, நித்திய கல்யாணி யம்மையாரோடு மறைந்தருளினார். அதுகண்டு கண்ணுவமுனிவர், பத்தினியாரோடு அதிசயமும் துன்பமும் அன்பும் ஆனந்தமுமடைந்து நின்றார். பின்பு அந்தக் கண்ணுவமுனிவர் சேதுகங்காதீர்த்தக் கரையிலே ஒரு பருணசாலையையமைத்து அதிலேயிருந்துகொண்டு, அன்று தொடங்கி எம்பெருமான் திருவடியிலமைந்த அன்போடு நியமத்தையுடையவராய் நாடோறும் அந்தச் சேதுகங்கையிலே ஸ்நானம்பண்ணி, வேதவோசை நீங்காத திருக்கோயிலுட்புகுந்து, ஆதிபகவானும், சோதிவடிவினரும், நித்தியகல்யாணியம்மை நாயகருமாகிய கைலாசநாதஸ்வாமியைப் பூசித்து, பிரதக்ஷிணம் நமஸ்காரம் ஸ்தோத்திரமென்னு மிவைகளைச்செய்து, ஆறுசுவைகளோடு கூடிய வன்னத்தை நிவேதனஞ்செய்து, சிவனடியார்களுக்கூட்டி, தாமுமனையோடு முண்டு, எல்லாஞ் சிவவடிவேயென்று பாவித்து, ஒருகுறைவுமின்றி யிருந்தார். இந்தச்சரித்திரத்தை யகத்தியமுனிவர், முனிவர்கள் கேட்கச் சொல்லி, பின்னுமொரு சரித்திரஞ் சொல்லியருளுவார்.

கண்ணுவமுனி பேறுபெற்றபடலம் முற்றிற்று.

## பத்தாவது.

## பூம்புகார்ப்படலம்.

மிகுந்த வற்புதமுடையதும், எவர் காதுக்கு மின்பஞ்செய்வதும், சிவபெருமான்மீது அன்பை விளைப்பதுமாகிய வணிகரிளைப்பை நீக்கிய சரித்திரத்தைச் சொல்லுவோம். முனிவர்களே, மனத்தை யொருப்படுத்துக் கேளுங்கள்.

திருவெண்காட்டுக்குச் சமீபத்திலேகாவேரிசமுத்திரத்திற்சென்று கலக்குஞ்சங்கமமுகத்திலே காவேரிப்பூம்பட்டினமென்று ஒருபெரிய நகரமிருந்தது. அந்த நகரமானது பிராமணர்களாலும், க்ஷத்திரியர்களாலும், வைசியர்களாலும், சூத்திரர்களாலும், அநுலோமாதி சங்கரசாதியர்களாலும், பிரமசாரிகளாலும், கிருகஸ்தராலும், சந்நியாசிகளாலும், வேதசாஸ்திரங்களிலே வல்லவர்களாலும், நித்தியாக்கினி கோத்திரிகளாலும், இடையறாது யாகஞ்செய்பவர்களாலும், பரசிவத்தியானம் நீங்காத யோகிகளாலும், ஏனையோராலும் நெருங்கப்பெற்று மாளிகை முதலியவற்றாற் சிறந்து வாவி கூவல் முதலியவற்றால் வளம்பொருந்தி யெண்ணிலடங்காத செல்வம்மிகுந்துவிளங்கியது. பிரமாமுதலிய தேவர்களையும் எல்லாவுலகங்களையும் பெற்ற மருதவாணர் மகன்மையாக வந்திருந்து அடிமைகொண்டருளப்பெற்ற திருவெண் காடராகிய பட்டினத்தடிகளுதித்த நகருமதுவேயாம். அந்த நகரத்திலே வாழ்கின்றவர்

களுடைய மரபுள் வைசியர்களுடைய மரபே மிகுதி யாம். அப்படிப்பட்ட சிறந்த மரபையுடையவர்கள். எண்ணில்லாத செல்வப் பெருக்கத்தினாலே மகிழ்ச்சி கொண்ட வாழ்வுடையவர்கள். சிவபெருமானை மேலாகத்தெளிந்த மனமுடையவர்கள். சிவபெருமானுக் கென்றும் வழிபாடுசெய்பவர்கள். சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்யுங் கடப்பாடுடையவர்கள். சிவபெருமானுக்கேற்ற தருமங்களைச் சிறக்கச் செய்பவர்கள். கொடை, பொறுமை, அடக்கம், வாய்மை, இரக்கம்முதலிய குணங்களெல்லாம் வாழ்வதற்குறையுளானவர்கள். சிவபெருமா னருளிச்செய்த முதனூலுக்கு விரோதமில்லாதபடி. தங்களுக்கேற்ற வொழுக்கத்தி னிற்கின்றவர்கள். இந்த வைசியகர்ளெல்லாம் அந்தக் காவேரிப்பூம் பட்டினத்திலே சிறப்போடு புகழ் பரவ வாழ்ந்திருக்குங் காலத்திலே ஊழின்வலிமையினாலே தங்களுடைய மெய்ம்மையான தருமத்தைவிட்டார்கள். ஆராய்ந்து பார்க்குமிடத்தில் ஊழ்போலப் பெருவலியுடையனயாவை? பொருண்முதலிய பொலிவுக்கெல்லாங் காரணந்தானேயாகிச் சிறந்த தருமத்தை விட்டுத் தங்களுடலை வளர்த்துக் கொண்டிருந்தமை யால் வறுமை நோய்துன்பமிவைகளுண்டாயின. இதனாலன்றோ எல்லாவற்றுக்கும் தருமத்தை முதலாகக் கூறினார்கள். தனங்களை யெல்லாமிழந்தார்கள். தானியங்களை யிழந்தார்கள். வயல்களையிழந்தார்கள். பசுநிரை

களை யிழந்தார்கள். துன்பத்தையடைந்தார்கள். கள்வர்கள்வந்து திருடவும் பெற்றார்கள். சிவபெருமானுடைய திருவடிகளை மறந்தவர்கள் வருத்தமடைவாரென்பதற்குஇஃதொருசான்றாகும். தம்முடைய வளங்களெல்லா மழிதலும் வருந்திவாடி வறுமைத்துன்பத்தை முன்னறியாத வணிகர்களெல்லோரு மோரிடத்தில்வந்து ஒருங்குகூடி எங்களுக்கு இப்பொழுது இதென்ன துன்பம்வந்ததென்று சிந்திக்கின்றார்கள். ஐயோ! பொருள்களும் பயிர்விளைவுகளும் பசுக்கூட்டமுமழிந்தன. வியாபாரத்திற் பயனற்றன. எது எது செய்தாலும் பயனில்லாது போகின்றன. வீட்டிலிருந்த சிறிதுபொருளையும் திருடர்கள் கைப்படுத்துககொண்டார்கள். ஐயையோ இந்தக் கடுந்துயர்க்கென்ன செய்வோம்! சிறுவர்கள் பசியினாலே வாடிப்பரிந்து தாய்மாரைப்பார்த்து அன்னமன்னமென்று கதறிக்கேட்கின்றார்கள். இனிமேல்இந்த நகரத்திலே ஒரு கணப்போது மிருக்கலாகாது. எந்தத் திசைகளிலேனும்போய்த் திரவியந்தேடி வாழ்ந்திருப்போம். இதுவே நாங்கள் செய்யத்தக்கதென்று பேசித் துணிந்துகொண்டு, அந்தக் காவேரிப்பூம்பட்டினத்தை விட்டுநீங்கி, வறியவர்களுக்கு மாதாவைப்போலவிரங்குஞ் சிவபெருமானுடைய திருவருணோக்கத்தாலே சிவபத்திவந்துசேர, சையபருவதத்தையடைந்துஅதினின்றும் பெருகாநின்ற காவேரிநதியிலே ஸ்நானம்பண்ணி, அந்த நதியின் கரைகளிலேயுள்ள அநேக க்ஷேத்தி

ரங்களிலே சென்று சஞ்சரித்துச் சிவபெருமானருளைச் சிரமேற்கொண்டு விரைந்துவந்து, மகாதேவியம்மையோடு மெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீகண்டேசுரருடைய உபயபாதங்களைத் தரிசித்துவணங்கி, கபிலைப்பசுசெய்த பூசையையேற்றருளிக் கபிலாம்பிகையோடு வீற்றிருக்கின்ற கபிலேசுரருடைய திருவடிகளைத் தரிசித்து ஸ்துதித்து, சங்கமமுகத்தில்வந்து, பராசரமுனிவர் பூசைக்குவந்தருளி ஆதிகேசவப் பெருமாளோடுவீற்றிருந்தவேதாம்பிகா சமேதரான சிபெருமானை வழிபட்டு, கிருஷ்ணராலும் அருச்சுனராலும் முற்காலத்திலே பூசிக்கப்பட்ட அசலதீபேசுவர மகாலிங்கத்தை வணங்கி, வாலியினலே செய்யப்பட்ட பூசையையேற்றருளிய அகத்தியேசுரரை ஸ்துதித்து, பிரகிலாதபூசிதரான வேதநாராயணரை ஸ்துதித்து, புகலடைந்தோர்க்குத் திருவுளமிரங்கும் ஸ்ரீகிகேதபுரேசுரரை வணங்கி, இராமஸ்வாமி செய்த பூசையையேற்றருளிய சோதிநாயகரைத்தொழுது, கதம்பவனநாயகரை ஸ்துதித்து, திருப்பிரயாணேசுரருடைய திருவடியைவணங்கி, நீலிவனேச்சுரரைநமஸ்கரித்து, சிரங்கநாயகரையும், வெண்மலைமீதுவீற்றிருந்த புருஷோத்தமதேவரையும், நற்பயனைக்கொடுக்கும் புண்டரீகாக்ஷ தேவரையும் ஸ்துதித்து, திருவானைக்காவில் வீற்றிருந்த அகிலாண்டேசுவரி சமேதரான ஜம்புகேசுவரப்பெருமானை ஸ்துதித்து, மட்டுவார்குழலியம்மையாரோடு திரிசிராப்பள்ளிமீது

வீற்றிருந்து ஆபத்தைத்தீர்த்தருளுந் தாயுமானவரைவணங்கி, அந்தஸ்தலத்தைநீங்கி, காவேரிக்கரைமார்க்கமாகக் கீழ்த்திசையிலேபோய், இருகரைகளிலுமுள்ள விஷ்ணுவாலயங்களிலும் சிவாலயங்களிலும் சென்று அங்கங்குள்ள தீர்த்தங்களிலே ஸ்நானம்பண்ணி மெய்யன்போடு வழிபட்டுத் தங்களுடைய மெலிவை மனத்துட்கொண்டுபோய், திருவிடை மருதூரையடைந்து, எல்லாச்சிறப்புங்கொடுக்கவல்ல கல்யாணதீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணி, சோழராஜாக்கள் பூஜைக்கிரங்கிய மகாலிங்கமாய் வரகுணபாண்டியருடைய பிரமகத்தியைநீக்கி யாட்கொண்டருளிய பெருமானை ஸ்துதித்து, அருள்வள்ளலாகிய சிவபெருமான் சிவஞானத்தைத் திருமந்திரமாகச் செய்யும் வண்ணந் திருமூலநாயனருக்கருள்செய்த திருவாவடுதுறையை ஸ்துதித்து, மூன்றுகோடிமுனிவர்கள் பத்திசெய்த திரிகோடிகாவை ஸ்துதித்து, காவேரியினடுவுட் பூம்புனலபொலிந்து தோன்றுந் திருத்துருத்தியைவணங்கி, கௌரியான வுமாதேவியார் மயிலாகிச் சிவபெருமானது திருவடியைப்பூசித்த மாயூரத்தைவணங்கி நீங்கி, புள்ளிருக்குவேளூரென்னும் பெயருடைய வைத்தியேசுரன்கோயிலை ஸ்துதித்து, உமாதேவியார் பொன்வள்ளத்திலே திருமுலைப்பாலையேந்தி ஞானசம்பந்தமூர்த்திகளுக்கூட்டும்வண்ணந் தோணியப்பரருள்செய்த சீர்காழியைவணங்கி, கட்டழகுவாய்ந்த திரிபுராம்பிகையைத்தொழுது,

மணற்குன்றுஞ் சோலையும் பொலியப் புட்களெல்லா மொலிக்க ஆழ்ந்தசுழிபொருந்திய நீர்மீது சேலினங்கள் துள்ளிப்பாய வாரவாரித்துக்கொண்டு கந்தருவர்களுந் தேவர்களுங்கலந்து மகிழச்செல்லாநின்ற மங்கலகரமான கொள்ளிடத் திருநதியைக்கண்டு, விதிப்படி ஸ்நானம்பண்ணி, சிவபெருமானருள் நின்றுசெலுத்த; செந்தாமரைக் கண்ணராகிய விஷ்ணு முதலிய தேவர்கள் வழிபடுகின்ற விராட்புருஷனுடைய விருதயபுண்டரீகமாகிய சிதம்பரத்தில் மகிழும்பெருமானை யிருதய கமலத்தே தியானஞ்செய்துகொண்டு, கொள்ளிடத்திருநதியைநீங்கி யிளைப்பால்வாடி மெல்லப்போய், சிதம்பரத்தையடைந்து, சிவகங்கையிலே ஸ்நானம்பண்ணித் திருக்கோயிலையடைந்து, நிலாவீசுந் திருமுடியையுடைய சிவபெருமான் திருச்சிற்றம்பலத்தின்கண்ணே செய்தருளும் பரமானந்த தாண்டவத்தை தரிசித்துக் கொண்டு வெளியேபோய், பசிதண்ணீர்த்தாக மிவைகள் தாக்கச் சோர்ந்துவாடி யுண்ணுகற் கன்னந்தேடி வீதியிலேசென்றார்கள். பெரும்பற்றப் புலியூரெனப் பெயரிய அந்தச் சிதம்பரத்திலே வசிக்கின்ற அகோரசிவாசாரியரென்னும் பெயர்பெற்றவந்தணர் வேதங்கண் முழுது முணர்ந்தவர். அகம்புறமென்னு மிருகரணங் களுமடக்கியவர். பழமையாகிய நல்லொழுக்கமுடையவர். சிவபெருமானுடைய திருவடிகளைக்கொண்ட வுள்ளமுடையவர். சிவநூல்களெல்லாந் தேர்ந்துணர்ந்த

வர். தவநெறியினிற்கின்றவர். சிரௌத ஸ்மார்த்தங்களி லேவல்லவர். பிரமசரியவிரதமுடையவர், சிவோகம்பா வனையுள்ளவர். எவர்களிடத்து மிரக்க முடையவர். பொன்னைக் கல்லு ஓடென்று எண்ணுகின்றவர். இந் தப்பிரகாரம் பெருந்தேசோடுசிறந்த அந்த ஆசாரியனை, பிள்ளைகள் மனைவியரோடும் பசியால் வாடியுடல்சோ ர்ந்து மனம் வருந்தும் வைசியர்களெல்லா மடைந்து, அவர் முன்னே நின்று, எம்பெருமானே அக்கினி போன்ற கொடும்பசியினால் நாங்கள் வெதும்பி வந்தோ மென்றார்கள். அந்த வார்த்தையைக்கேட்ட அகோர சிவாசாரியர் இரங்கி யவர்களுக் கருள் செய்து, தமது சீடர்களை நோக்கி, பாகத்துக்கு வேண்டும் பொருள்க ளைக்கொண்டுவந்து ஓராைக் கணப்பொழுதினுள்ளே அன்னங்கொடுங்களென்று பணித்தார். அந்த வாக்கை த்தலைக்கொண்டு சீடர்களும் மகிழ்வோடு அவற்றைச் செய்ய; வைசியர்களெல்லோரும் தங்கள் பசிதீர நன் றாய் மகிழ்ந்து அன்ன முண்டபின் மனந்தெளிந்து, அகோர சிவாசாரியரை வணங்கி முன்னேநின்று, காவே ரிப்பூம்பட்டினத்திலே தாங்களிருந்ததும், சிவபத் தியை விட்டதும், அரசனாற் கஷ்டம் வந்ததுமாகிய இவை முதலான தங்கள் விருத்தாந்தங்களை யெல்லாம் விண்ணப்பஞ்செய்து வேண்டலும், அளவில்லாத கரு ணையுடைய அகோர சிவாசாரியர், வணிகர்களே, நீங் களினிமேல் வருந்தாதொழிக வென்றருள் செய்து,

வறுமையை வேரோடுகளைவதாயும், சகல பாவங்களை யுங் கெடுப்பதாயும், சிவபெருமானுடைய திருவருளுக் கேதுவாயும், மந்திரங்களுக் கெல்லா மரசாயும், இன்ப வடிவாயுமிருக்கின்ற ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யுபதேசம் பண்ணி, மல நீக்கத்தையும் இஷ்டங்களையுங் கொடுக் கும் விபூதி கொடுத்து, இவைகளை நீங்கள் கைக்கொ ண்டு ஏற்றவைகளைச் செய்யுங்களென்று பொருள் முத லிய சிலவற்றைக்கொடுத்து, பின்னர் ஒப்பில்லாத சூக் குமமான சிவதருமங்களைச் சிவப்பொருள் பெருகத் தெளிவாக அருளோடு உபதேசித்து, முன்போல வுங் களுடைய நகரத்தையடைந்து மிகுந்த வின்பத்தோடு வாழ்ந்திருங்களென்று ஆசீர்வாதஞ் செய்தலும், வணி கர்ளெல்லோரும் அன்போடு அவற்றைக்கேட்டுச் சந் தோஷ சாகரத்திலே முழுகி, பின்பு தங்களுக்கு வாழ்வு தந்த வகோர சிவாசாரியரை மீளவும் மீளவும் வலஞ் செய்து சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி, எங்களு டைய பெருங்குறைகளை யெல்லாந் தவிர்த்தருளினீர். எங்களுக்குத் தெய்வமுந் தேவரீரே யென்றுவிண்ணப் பஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு, அவ்விடத்தை நீங்கி, தம்முடைய பதியாகிய காவேரிப்பூம் பட்டின த்தை யடைந்தார்கள். பின்பு அகோர சிவாசாரியர் கொடுத்த பொருளாலே பல வியாபாரங்களைச் செய்தா ர்கள். செய்தலும், பஞ்சாக்ஷரத்தின் பிரபாவத்தாலும் விபூதியின் விசேஷத்தாலும் பூருவ பக்ஷத்துச் சந்திரன்

போலச் செல்வமெல்லாம் நாடோறும் வளர்ந்தன. பசு நிரைகள் நிறைந்தன. பயிர்வகைகள் நன்றாய்ப் பலித்தன. பதுமராகம் முதலிய நவரத்தினங்களும் ஆடகம் முதலிய நால்வகைப்பொன்களும் வெள்ளி முதலிய மற்றவைகளும் பொருட்சாலையிலே நிறைந்தன. பெண்ணடிமை யாணடிமையென்னுமிரண்டு மளவில்லாதமைந்தன. யானைகள் பொலிந்தன. குதிரைகள்மலிந்தன. சிவிகைகள் தக்கன. சீர்கண் மிக்கன. ஏழு மாடங்களுமெட்டு மாடங்களுமுடைய மாளிகைகள் இந்திரன் மாளிகையோ அல்லது குபேரன் மாளிகையோவென்று சொல்லும்படி நிலைபெற்றன. செய்குன்றுகளும் வீதிகளும் நிலாமுற்றங்களுங் கோபுரங்களும் மதில்களும் பிறவும் விளங்கின. இப்படிப்பட்ட சிறப்புப்பொருந்திய காவேரிப்பூம்பட்டினமானது அளகாபுரியினும் பொன்னகரத்தினும் மிகுந்து விளங்கியணிபெற்றோங்கியது. பரமசிவனாருடைய திருவடியிற் பத்திவிளைந்தமையால் வைசியர்களெல்லாம், பரமசிவனார் திருவடியை யுள்ளத்திலே தியானிப்பவர்களாயும், பரமசிவனார் திருவடிக்குப் பணிகள் செய்யுந்தன்மையுடையவர்களாயும், பரம சிவனார் திருவடிகளைப் புகழும் பலபுராணங்களைக் கேட்பவர்களாயும், வேதாகமங்களில் விதித்தவழி யொழுகுகின்ற மெய்யறிவுடைய பிராமணர்களுக்கு, அன்னதானம் வஸ்திரதானங் கோதானம் பூதானம் முதலிய தானங்களைச் சிறக்கச் செய்பவர்க



ளாயும், குற்றமில்லாதபடி திரிகரணங்களினுலும் அவர்களைப் பூசைசெய்பவர்களாயும், சிவதருமங்களை விளங்கும்படி காப்பவர்களாயும், யாசிக்கின்றவர்கள் அந்த யாசகத்தொழிலை நீங்கும்வண்ணங் கொடுக்கின்றவர்களாயும், வஞ்சகமுடையவர்களைக் கண்ணினுற் பார்க்கவுமுடன்படாதவர்களாயும், அரசர்களாலே செய்யப்படும் நல்லவரிசைகளைப் பெற்றவர்களாயும், தென்புலத்தார் தெய்வம் விருந்து சுற்றம் தாமென்னு மைம்புலத்தாேரும்புந் தலைமையுடையவர்களாயும், சகோதரர்கள் பிள்ளைகள் அவர்கள் பிள்ளைகள் மனைவியர் முதலிய குழுக்களை யுடையவர்களாயும், குபேரனுங்கண்டால் வெட்கமடையத்தக்க போகப் பொலிவுடையவர்களாயும், மனமும் சரீரமும் சந்தோஷத்தாற் பூரிப்புடையவர்களாயும், நோயினுல் வருந்தளர்ச்சி யில்லாதவர்களாயும், தாபமென்பது சிறிதுந் தமக்கில்லாதவர்களாயும், தெளிந்த தங்கள் புகழைத் தெய்வப் பெண்கள் பாடும்படி சிறந்த சீருள்ளவர்களாயும், விளங்கினுர்கள். இவர்கள் செல்வந்தான் என்னை யென்னையென்றுபெரும்போகத்தையுடையப்பொன்னுலகத்துத் தேவர்களும் புகழும்படி வணிகர்களெல்லாம் அகோர சிவாசாரியருடைய அருளினுலே விளங்கினுர்கள். முனிவர்களே! சிவபெருமானுடைய வடிவமாகிய குருவினருள் சிறிது வாய்க்கில் உலகத்தில் யாதுதான் அரிது!

பூம்புகார்ப்படலம் முற்றிற்று.

## பதினோராவது
## அகோரசிவாசாரியப்படலம்.

இந்தப் பிரகாரம் சமுத்திரபானஞ் செய்தவகத்தியமுனிவ ரருளிச்செய்தபொழுது, முனிவர்கள் அதனைக்கேட்டு ஆச்சரிய மடைந்து இவற்றைச் சொல்லுகின்றார்கள். முனிபுங்கவரே! உம்முடையவாக்காகிய அமிர்தத்தை எங்கள் செவியாகிய கலத்திலே நிறையப்பெய்தும் மனந்தெவிட்டிற்றில்லை. தேவரீரருளிச்செய்த அகோர சிவாசாரியருடைய பெருமை இன்னபடித்தென் றளவிடுகல்கூடாது. அந்த வாசாரியர் யாருடைய புத்திரர்? மேன்மையடைந்தது தானெப்படி? எதின்பொருட்டு அவர் ஆசாரியராயினர்? சைவவொழுக்கமுடையவர்களுக்கு முதன்மையான தெவ்வாறு? மெய்ஞ்ஞானத் தவமிக்க முனிவரே, இங்கே நாங்கள் வினவிய விஷயங்களையெல்லாம் அவருடைய உற்பத்தி முதலியவைகளை [illegible] நெல்லிக்கனிபோலத் தெரிவித்தருளுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். விஷ்ணுவடிவத்தைச் சிவலிங்கமாக்கிய அகத்திய முனிவர் அதுகேட்டு, தவத்தினுயர்வுடையவர்களே, மனத்தை யொருப்படுத்துக் கேளுங்களென்று அருளிச் செய்கின்றார்.

போக வடிவங்கொண்டு [illegible]த்தையுதவியும், உக்கிரவடிவங்கொண்டு [illegible] யும், யோகவடிவங்கொண்டு யோகத்தையாக்கியும், அந்தந்தப் பரிபக்குவ

முடையவர்களுக்கு ஏற்றபடி திருவருள்செய்யுஞ் சிவ பெருமான், தமக்கு உயிர்த்துணையாகவிருந்து உயிர் களுக்கு மாதாவாயருளுகின்ற உமாதேவியாரோடு முன்னொரு காலத்திலே சிங்காதனத்தினின்றும் நீங்கி வெளியேவந்து திருக்கைலாய மலையின்மீது பலவகை மிருகங்கள் அற்புதத்தோடு மிருக்கின்ற பலசிகரங் களும் வாழும்படி பார்த்தருளுஞ் சமயத்திலே, என் றைக்கும் அகவியின்றாடுகின்ற மயில்களும், தகுதி பெறப் பேசுகின்ற கிளிகளும், நாகணவாய்களும், குயில்களும், பிறபறவைக்கூட்டங்களும் விளங்குஞ் சிறப்பினையுடையதும், பலவகைத் தாதுக்கள்சேர்ந்து சிறக்குந் தன்மையதும், பொற்றாமரைகள் மிகுந்து என்றைக்கும் வறத்தலில்லாதிருக்கும் வாவியுங்கூவ லுந் தடாகமும் நெருங்கப்பெறுவதும், செறிந்த தேனையுண்ணும் வண்டுகளினாற் பிரகாசிப்பதும், கற்பக விருக்ஷவனமுங் காமதேனு நிரைகளுஞ் சிறந்திருப்ப தும், இளவேனின்முதலிய ஆறுபருவங்களிலும் மல ரும்புஷ்பங்களை யளாவிச் சிறுகாற்றுலாவுஞ் சீருடைய தும், சிந்தாமணிகள் பொலியப்பெறுவதும், மங்கல வடிவமானதும், காணுந்தோறுங் காணுந்தோறுங் கண் களையும் மனசையுந் திரும்பாசுவகை செய்வதுமாகிய இவ்வகைச் சிறப்புடைய இரத்தினமயமாகிய சிகரத் தையடைந்து, உமாதேவியாரை நோக்கி, நங்கையே, மிகுந்த வாச்சரியமுடையதாயும் உள்ளத்துக்கு மகிழ்

ச்சியுண்டாக்குவதாயுஞ் சிறப்புடையதாயு மிருக்கின்ற இந்தச் சிகரத்தைப் பார் பாரென்று எம்பெருமாட்டிக்குக்காட்டி, அவரோ டருள்விளையாடல் செய்துகொண்டு நெடுநேரம் அங்கேவீற்றிருந் தருளியபொழுது சிவபெருமானுடைய தென்றிசைநோக்கிய முகமாகிய அகோரமுகத்தினின்றும் ஒருவேர்வைத்திவலை தோன்றியது. அந்தத்திவலையை உமாதேவியார் தம்முடைய திருக்கையினலெடுத்து, கங்கையிலே விட்டருளினார். அந்தத்திவலை சிவபெருமா னுஞ்ஞையினாலே ஒரு குழந்தையாயிற்று.

இதற்குமுன், சிவபெருமா னிறக்கின்றவர்களுடைய வலக்காதிலே பிரணவமந்திரோபதேசஞ் செய்தருளும் ஸ்தலமாகிய காசிக்குச் சமீபத்திலே கங்காநதிக்கு மேல்கரையிலே விளங்காநின்ற வோராச்சிரமத்திலிருந்தவரும், சிவபெருமானுடைய திருவருள்வாய்க்கப்பெற்றவரும், சிவதருமங்களை யாராய்ந்தவரும், நல்லநூற்பொருள்களைத் தேர்ந்தவரும், பிராமணருட்சிறந்தவரும், மகாதேசுடையவருமாகிய கோவிந்தஸ்வாமியென்பவர், தம்முடைய பத்தினியாகிய சுசீலையாரோடுபுத்திரப்பேற்றின்பொருட்டுப்பலநாளாகத் தவஞ்செய்திருந்தார். அவர் சூரியனுதிக்குமுன் ஸ்நானஞ்செய்யும்பொருட்டு மனைவியாரோடு, பாவத்தை நீக்கி யிம்மைமறுமைகளைக் கொடுக்கவல்ல கங்கையையடைந்தார். அப்பொழுது அந்தக் கங்காநதிக்கரையிலே

ஒரு மணற்குன்றிலே சிவபெருமானுடைய திருமுகத்தினின்றுந்தோன்றிய சிறுவர், சந்திரவிம்பம்போன்ற முகமும், மீன்போன்ற கண்களும், குருந்துமுளைபோன்ற பற்களும், கொவ்வம்பழம்போன்ற சிவந்தவாயும், சங்குபோன்றகழுத்தும், தாமரைத்தண்டுபோன்ற தோள்களும், பொன்போலப் பொலிந்த சரீரமும் விளங்கக் காற்பெருவிரலை வாயில்வைத்துச்சுவைத்துக்கொண்டு, யாழோசையைவென்ற வினியவோசையுண்டாக வடிக்கடிவாய்விட்டழுதார். அங்கேவந்த கோவிந்தஸ்வாமியென்பவர், உள்ளத்தையுங் கண்களையுங் கவருகின்ற அந்தச்சிறுவரைக்கண்டு மகிழ்ச்சியடைந்து, இதென்னென்று மிகுந்த வதிசயமுடையவாராய், தமக்குயிர்த்துணையாகிப் பக்கத்தேநின்ற மனைவியாருக்குக் காட்டினார். காட்டுதலும், சுசீலையார், குமாரஸ்வாமிப்போலப் பேரழகுடைய சிறுவரைக் கண்ணாரக்கண்டார். சமீபத்திலேபோய்த் தழுவியெடுத்தார். தம்முடைய மடிமேல்வைத்தார். அவர் திருமுகத்தைப் பலமுறையும் பார்த்தார். உச்சியைமோந்தார். அவர் சரீரத்திற்பட்டதூளியைத் தம்முடைய வஸ்திரத்தினாலே துடைத்தார். அவர் பசியினால் வருந்துவதைப்பார்த்து, இப்பசிநீங்கும்வகை யெவ்வாறோவென்று துயரங்கூர்ந்தார். அந்தக்குழந்தை யிடத்தேவைத்த அன்பின்மிகுதியால் இரண்டு ஸ்தனங்களும் பால்சுரந்தன. அதுகண்ட சுசீலையார் அதிசயமடைந்து சிறுவருக்குப் பாலூட்டினார்

அ

ஊட்டாநின்ற மனைவியாரை அந்தணர்நோக்கிச் சொல்லுவார். பெண்ணே, இந்தக்குழந்தை யாருடைய குழந்தையோ? என்னஜாதியோ ? என்னகுலமோ? இந்தவேறுபாடறியாமற் போற்றுதல்தவறு. இக்குழந்தையை விடென்றார். அதுகேட்ட சுசீலையார் குழந்தையை நிலத்திலேவிடச் சகிக்காதவராய்த் துன்பங்கொண்டார். அப்பொழுது, சிவபெருமானுடைய திருவருளினாலே ஓரசரீரிவாக்கெழுந்து அருளிச்செய்கின்றது. பிரமணபுங்கவனே, இந்தப்பாலன் நம்மிடத்திலே தோன்றியவன். புத்திரன் வேண்டுமென்று தவஞ்செய்த உனக்கு இவனைத்தந்தோம். இப்பொழுதே உன்னுடைய பத்தினியோடும் ஸ்நானம்பண்ணி, இருக்கையையடைந்து அந்தணர்களோடு இவனுக்குச் சாதகருமம் முதலிய சம்ஸ்காரங்களை நிறைவேற்றிப் பத்தாநாளிலே அகோரசிவனென்று நாமகரணஞ் செய்யக்கடவாய். இவனால் உனக்குமிகுந்த பெருமையுண்டாகும் என்று ஆகாசத்திலெழுந்த திருவாக்கைத் தம்மிருசெவிகளுந் தளிர்ப்பக்கேட்டு, சொல்லுதற்கரிய ஆனந்த சமுத்திரத்திலே யமிழ்ந்தித் திருவாக்கைச் சிரமேற்கொண்டு வணங்கி, மனைவியாரைப்பார்த்து இவ்வாறு சொல்லுகின்றார். பெண்ணே, கேள். பிள்ளையின்றித் துன்பமடைந்த எங்களுக்குச் சிவபெருமா னருள்கூர்ந்து இந்தக் குழந்தையைத் தந்தருளினார். உலகத்திலே யடையப்படும் பாக்கியத்துள் நாங்கள் பெற்ற பாக்கியமே பெரும்பாக்கிய

மாம் என்று சொல்லி, மனைவியாரோடு கங்கையிலே ஸ்நானம்பண்ணிக் குழந்தையைக் கையிலே யெடுத்துக்கொண்டு தமதாச்சிரமமடைந்து, சிவபெருமான் பணித்தருளியபடியேசாதகருமம் முதலியன முடித்து, அந்தணர்களுக்குச்சுவர்ணதானம் முதலியவைசெய்து, நல்ல சிறப்புக்கொண்டாடி, சிவம்பெருக நாமகரணம் பண்ணி மனமகிழ்ந்தார். இவ்வகைச் சிறப்புற்ற சிறுவனை அங்குள்ள பிராமணர்களெல்லாம் வந்தடைந்து நடந்த விருத்தாந்தங்களைப் பிதாவினாலறிந்து உள்ளம் மகிழ்ந்து அவனைக் குமாரஸ்வாமியெனவே மதித்து ஆசீர்வாதங்களாற் சிறப்பித்துப் போயினார்கள். வேத நூல்வல்லபிதாவும், அந்தந்தக்காலங்களிலே உபநிஷ்கிரமணம் அன்னப்பிராசனம் சௌளமென்னு மிவைகளை விதிப்படி நடத்தி, எட்டாவது வயசிலே பூணுநூற் சடங்காகிய உபநயனத்தைச் சிறக்கச்செய்தார். பின்பு பிரமசரிய நிலையிலே யொழுகுகின்ற அகோரசிவனார், நூல்களையெல்லாங் குருமுகமாகவே கொள்கவென்னும் விதிநிலையிலே நின்றுகொண்டு, உரியகாலத்தில் வேதங்களை யத்தியயனஞ் செய்பராய், சிக்ஷை முதலிய அங்கசாஸ்திரங்களையும் மீமாஞ்சை முதலிய உபாங்க சாஸ்திரங்களையும் புராணேதிகாசங்களாகிய பிரத்தியங்க சாஸ்திரங்களையும் பிறசாஸ்திரங்களையுங் கற்று உளங்கொண்டார். பத்துவயசு வந்தபொழுது, தந்தையார், அவருக்கு விவாகஞ் செய்யும்பொருட்டு

நல்லகுலத்திலே ஜனித்த ஒரு பெண்ணை மனையாரோடு சிந்தித்திருந்தார்.

அக்காலத்திலே பிரமாவினுடைய மனசிலே தோன்றியவரும், ஞானபோதத் தலைமையுடையவருமாகிய சனற்குமார மகாமுனிவர், காமிகம் முதலிய வாகமங்களையெல்லாம் சிவபெருமானிடத்திலே பெற்றுக்கொண்டு, அவருடைய ஆஞ்ஞையால் விரைவில் வந்து காசியையடைந்து, கோவிந்தஸ்வாமியி னிருக்கை புகுந்து, அழுகொழுகாநின்ற அவருடை சிறுவரைக்கண்டு அதிசயமுற்று, அளவில்லாத தேசுவாய்ந்த இக்குழந்தையைப் பெற்றுக்கொண்டது, கோவிந்தஸ்வாமியின் மனம் வாக்குக்கடந்த பாக்கியமே யென்றெண்ணி, சிவபெருமா னருளிச்செய்த வாகமங்களை யகோர சிவனார் பெறும்படி யுபதேசித்து, பின்பு உமாதேவி சகாயராகிய சிவபெருமானை மனசிலே தியானஞ்செய்து அபிமந்திரிக்கப்பட்ட விபூதியைக் கொடுத்து, ஆசீர்வாதங்களைச்செய்து சிவயோகியாவாயென்று சொல்லி யருளிச்சென்றார். பிரமசரியத் தொழுகுமவர் அந்நூல்களையெல்லாம் ஒருமுறையிலே மனத்திற்கொண்டு சகல விஞ்ஞான சாகரராயினார்.

இத்துணைப்பெருஞ் சிறப்பையடைந்த அகோர சிவாசாரியர், பின்னை நடக்கவேண்டியவைகளை யெல்லா முளத்திலேகொண்டு, பிதாமாதாவாகிய இருவருடைய பாதங்களிலே நமஸ்காரம்பண்ணி, அதன்

மேல், அவர்களோடு அந்தஸ்தலத்தை நீங்கி, தவங்களுக்குஞ் சித்திகளுக்குங் காரணமான சிதம்பரத்தை வந்தடைந்து, அணிபொருந்திய ஒருவாசஸ்தலத்தை யமைத்துக்கொண்டு, நித்தியமும் நைமித்திகமுமாகிய பூசை செபநியமங்களையும் ஓமம் தருப்பணம் பிராமண போசனமாகிய விவைகளையும் விதிப்படி சிறக்கச் செய்து, மந்திரயோகம் அடயோகம் தாரயோகம் நாதயோகம் இலயயோகம் இராசயோகமென்னுமிவைகளையும் பிறவற்றையும் முயன்று முடித்துப் பெருஞ்சித்தராகிப் பிரசித்தியடைந்தார். சிவபெருமானுடைய திருவடிகளை யுள்ளத்திலிருத்திச் சிவயோகஞ்செய்து சிவயோகியாயிருக்கின்ற அவருடைய வொழுக்கத்தை யெடுத்துச் சொல்லின்;—அவர் திரிபுண்டரமாகிய விபூதியோடும் உருத்திராக்ஷமணிகின்றசரீரமுடையவர். சிவலிங்கபூசைசெய்யும் நியதியுள்ளவர். சிவோகம் பாவனையுடையவர். வேதசிரசும் சோதிடமும் பிறவும் வடித்துணர்ந்த வன்மையாளர். மூன்று காலங்களையுமுணர்ந்தவர். துஷ்டநிக்கிரகமுஞ் சிஷ்டபரிபாலனமுஞ் செய்பவர். ஒப்பில்லாத சிறப்பையுடையவர். உயிர்கண்மீது இரக்கமுள்ளவர். எவர்களுக்கும் நன்மையேசெய்பவர். இவ்வாறு அவர் மனிதர்களுக் கரிய பெருமையோடு மிருத்தல்கண்டு, தில்லைமா நகரத்துள்ளவர்களெல்லாம் அவரை ஸ்துதித்திருந்தார்கள். முனிவர்களே, நீங்கள் வினவிய வினாக்களுக்கு விடையாக

அகோரசிவாசாரியருடைய பெருமையைச் சொன்னோம். இனிமேல், செல்வம் மிக்கவணிகர்கள் தங்களுக்கு வந்த மெலிவுகள் நீங்கி யிளைசைமாநகரத்திலேவாழ்ந்திருந்த சரித்திரத்தைச் சொல்லுவோம்.

பிரமாவின் றொடையிற்றோன்றின மரபினராகிய வணிகர்கள், காவேரிப்பூம்பட்டினத்திலே பெருஞ் செல்வத்தோடு வாழ்ந்திருக்குங் காலத்திலே சோழதேசத்திலே பஞ்சம்நேரிட்டது. நதிகளெல்லாம் வறந்து நீர்குன்றின. குடிகளெல்லாம் பசியினாலே வருந்தின. அது கண்டு சோழராச னிரங்கினான். இவ்வாறு பஞ்சம் நேரிட்டும், குருவருளினாலும் சிவபக்தியினாலும் பஞ்சாக்ஷரம் விபூதி யுருத்திராக்ஷமென்னு மிவற்றின்மகிமையாலும் வணிகர்களுக்குப்பஞ்சத்தாலுண்டாகுந் துயரில்லை. தூரத்தீவுகளிற் செய்யும் வியாபாரத்தினாலே பொருள்கள் மேலும் மேலும் வளர்ந்தன. இந்த வணிகர்கள் மிகுந்த செல்வர்களென்பதைக் கேள்விப்பட்டுச் சோழராச னிவர்களை நெருக்கிப் பலமுறையும் பொருள்களை வாங்கிப் பின்னும் பெருந்துயர் செய்தான், குடிகளைப் பரிபாலனஞ்செய்யு மரசன் நிர்ப்பந்தஞ்செய்தால் அதனை யாவர் நீக்கவல்லவர்கள்! பகற் கொள்ளைக்காரர்போல இப்படி யரசன் செய்யுந் துயரத்தைச் சகிக்கமாட்டாதவர்களாய் வருந்தி யுறவினரோடுங் காவேரிப்பூம் பட்டினத்தை மெல்லத்தொடர்பறுத்து நீங்கி, °தமக்கு முன்னே புகலாகவிருந்த

அகோர சிவாசாரியர் வசிக்குஞ் சிதம்பரம் வந்துசேர்ந்து ஆசாரியருடைய இருக்கையையடைந்து அவருடைய சந்நிதானத்திலே நமஸ்கரித்து, தங்களுக்கு நேரிட்ட பொருட் செலவையும் அரசன் கொடுமையையும் முறையாக விண்ணப்பஞ்செய்து, இப்படிப்பட்ட கொடிய அரசனது நாட்டிலேயிருத்தல் தீதுதீது. ஆதலால், வேறொரு ஸ்தலத்தை யெங்கேனுங் கற்பித்து எங்களை விடுத்தருளுகவென்று வேண்டிநின்ற சீடர்களாகிய வைசியர் வார்த்தையைக்கேட்ட அகோர சிவாசாரியர், அவர்களைப் பார்த்து அருள்செய்து, சிவபெருமானுடைய திருவருளினாலேயே நல்ல ஸ்தலமிவர்களுக்குக் கிடைக்கவேண்டுமென்று நினைத்து, அவர்களுள்ளத்திறத்தையறியச் சிவபுராணங்கள் பலவற்றையும் படித்தார். பற்பலவாகிய ஸ்தலபுராணங்களைப்படிக்க கேட்கும் வணிகர்கள், இளைசைமான்மியத்தைக்கேட்ட பொழுது, விருப்பமும் மகிழ்ச்சியும் மனசிலே தோன்றப் பெற்றவர்களாய், இளைசைமாநகரத்திலே வசிக்க விரும்பினார்கள். அகோர சிவாசாரியர் இவர்களிவ்வாறு கருத்துடையராதலைத் தெரிந்து மகிழ்ந்து, பின்னே நிகழ்வனவறறை நினைந்து, வணிகர்களோடு செல்லத்துணிந்து, இளைசைமாநகரம் எவ்விடத்துள்ளதென்று ஆராயும்பொழுது, பாண்டிநாட்டிலேயுள்ளதென்று தெரிந்து, அந்தப் பாண்டிநாட்டுக் கரசனாகிய பாண்டியன், அரசர்களுக்கரசன்; நல்லொழுக்க

முள்ளவன்; அருள் பொறை அமைதி வாய்மை முத லிய நற்குணங்களையுடையவன்; மனுநீதி முறைப்படி செங்கோல் செலுத்தும் புண்ணியசீலன்; சிவபத்தியிற் சிறந்தவன். அவன் மதுரைமாநகரத்திலே வாழ்பவ னென்பதையும், அவனுக்கு ஆசாரியர்; தமக்கு நண்ப ராயும், ஞானத்துக்கு ஒரு நிதியாயும், மாணுக்கர்களுக் குக் கதிகொடுக்க வல்லவராயுமுள்ள ஈசான சிவாசா ரிய ரென்பதையுமறிந்து, சீடராகிய வைசியர் நாற்புற முஞ்சூழ நடந்து, மலைகளையுங் காடுகளையும் வயல்களை யுங்கடந்து, திருவாலவாயாகிய மதுரைமாநகரம் வந் தடைந்தார். சந்திரகுலத்தரசரா யிருந்தருளிய சோம சுந்தரக்கடவுள் தமக்குக் கிரீடஞ்சூட்டிய வரசியான மீனாக்ஷியம்மையோடும் அறுபத்துநான்கு திருவிளையா டல்களைச்செய்து எங்கள் துன்பங்கெடக் கோயில்கொ ண்டருளிய சிறப்பினையுடையது மதுரைமாநகரம். அந் தத் திருநகரத்திலே வேத வொலியும் ஆகம வொலியும் புராணவொலியும் நீங்காது, மெய்யுணர்வுடையவர்கள் வந்துசாருந் தன்மையதாய், திவ்வியதரமாய், தெய்வத் திருவெண்ணீற் றொளிப் பொலிவினதாய் விளங்குந் திருமடமொன்றுண்டு. அந்தத் திருமடத்திலே, வீற் றிருக்கும் பாண்டிநாட்டாசானுகிய ஈசான சிவாசாரியர் மிகுந்த நண்பினுலுபசரிக்க; அகோரசிவாசாரியர் மகிழ் ந்துவந்து அவரோடும் அளவளாவிக் கொண்டிருந்தார்.

அகோரசிவசாரியப் படலம் முற்றிற்று.

## பன்னிரண்டாவது.

# ஈசானசிவாசாரியப் படலம்.

அகத்திய முனிவரிவ்வாறு அருளிச்செய்ய, முனிவர்கள் கேட்டு, ஈசானசிவாசாரியர் யார்? அவருடைய உற்பத்தி யெவ்வாறு? பெரியோர்களுடைய கதையைப்பேணுதல் தூய்மையைத் தருமன்றோ? அதனால் அச்சரித்திரத்தைச் சொல்லியருளுகவென்று விண்ணப்பஞ்செய்ய; அந்த ஈசான சிவாசாரியருடைய உற்பத்தியைச் சொல்லுவோம். முனிவர்களே சாவதானத்தோடு கேளுங்களென்று அகத்திய முனிவரருளிச்செய்வார்.

துவாபரமென்று சொல்லப்படும் யுகத்தின் முடிவிலே, குற்றமெல்லாஞ் செறிந்து நலமெல்லாம் பொய்த்த கலியுகம் வந்தது. வருதலும், மனிதர்கள் யாவரும் உள்ளங்கலங்கி, விபூதி உருத்திராக்ஷம் பஞ்சாக்ஷரமென்னு மிவைகளிலே யிச்சை யில்லாதவர்களுஞ் சிவபத்தியில்லாதவர்களு மாயினார்கள். திருக்கோயிற் பணிகளை விட்டார்கள். வாவி குளம் வெட்டுதலை விட்டார்கள். அன்னங் கொடுத்தலை விட்டார்கள். மற்றைய தருமங்களையும் விட்டார்கள். இவ்வாறு மனிதர்களெல்லாமிருக்குங்காலத்தில் ஒருநாள் உயிர்களனைத்தையுமுய்யும்படி செய்தருளு மம்மையாரோடு சிவபெருமான் இடபவாகனத்தின் மீது அருள் விளையாட்டால் ஆகாச மார்க்கத்திலே வந்தருளினார். அப்பொழுது உமாதேவி

யார், இந்தப் பூமியிலுள்ளவர்களெல்லோரும் தருமசிந்தையும்சிவபத்தியும் நீங்கியது பார்த்து, கருணையினுற் சிவபெருமானை நோக்கி விண்ணப்பஞ்செய்கின்றார். என்னுடைய பிராண நாயகரே, பூமியிலிருக்கின்ற ஜனங்களெல்லாம் நரகத்தையடையும்படி கொடுவினைகளைத் தேடுகின்றார்கள். எம்பெருமானே, தேவரீர் ஆசாரிய வடிவமாய்ச் சிவபத்தியின் சம்பிரதாயத்தைப் பூமியிலே நிறுத்தி அருள்செய்யுமென்று விண்ணப்பஞ்செய்தார். அதுகேட்ட சிவபெருமான் அருள்கூர்ந்து, ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதமென்னும் ஐந்துதிருமுகங்களுள் ஊர்த்துவமுகமாகிய ஈசானமுகத்தினின்றும் ஒரு கலையைப் பூமியில் அனுப்பியருளினார். அந்தக்கலையானது வேதங்களு மாகமங்களுமோங்கவும், விபூதியுருத்திராக்ஷங்கள் துலங்கவும், ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தி னுண்மைவிளங்கவும், வைதிகமுஞ்சைவமுந்தழைக்கவும், சைவநெறியிலே மிக்க உத்தமப் பிராமணகுலத்திலே மாண்டவிய கோத்திரத்திலே போதாயன சூத்திரத்திலே சிவபெருமானுடைய திருவடிகளைத் தியானித்துத் தவப்பண்ணிய ஒரு பிராமணனைத் தமருக்குப் புத்திரராக வவதரித்தது. புத்திரருக்குச் செய்யத்தக்கனவாகிய ஜாதகருமாதி சம்ஸ்காரங்களை விதிப்படி பிதாச்செய்ய; அந்தப்புத்திரர் தந்தைதாயர் மனம்மகிழ வளர்ந்து, வேதநூல் விளங்குங்காலம் வரப் பிதாவினல் உபநயனஞ் செய்யப்பெற்றுப் பிரமசரி

யாச்சிரமத்தையடைந்தார். வேதம் முதலிய வித்தைக ளையெல்லாங் குருமுகமாகக்கொள்க வென்னும் வரை யறையைப் பாதுகாக்கும்பொருட்டு, ஒரு குருசாக்ஷி மாத்திரமாயிருக்க; அவரிடத்திலே அவைகளையெல் லாம் பெற்றார். ஓதுகின்றவைகளையெல்லாம் ஓதுதற் குமுன்னமேயறியு மொள்ளறிவுடையராகிய அவர், நைஷ்டிகப் பிரமசாரியாயும், வேதாகமங்களின் வழி யே யொழுகுகின்றவராயும், சிவபெருமான் றிருவடி யைப் பூசிக்கும் நியதியுடையவராயும், பற்றில்லாதவரா யும், பராசத்திக்குச்செய்யும் பூசைவலியால் ஒன்றை யாக்கவும் அழிக்கவும் வல்லவராயும், முன்னே தாம் தோன்றிய முகமானது என்றைக்கும் மேலாகவிருக் கும் முறையால் ஊர்த்துவசிகையை மேற்கொண்ட மெய்க்குருவாயும், விளங்கினார். சிவாகமங்கள் தோன் றிய ஈசானமுகத்தினின்றும் அவதரித்தமையாலும், சிவதத்துவோபதேசஞ் செய்தலாலும், சைவசமயந் தழைத்தோங்க வுதித்தருளியவவர், ஈசான சிவாசாரிய ரென்னுந் திருநாமத்தைப் பிரசித்தமாகப் பெற்றார். அந்தவீசான சிவாசாரியர், பூமியிலுள்ள மனிதரெல் லாம் அரசனுக்குள் அடங்கி வாழ்தலால், ஆதியிலே பாண்டியராஜனைத் தமக்குச் சீடனாகக்கொண்டு, அவ னுக்குச் சிவபத்தி விளையும்படியாகச் செய்து, அவன் வாயிலாக மனிதர்களையெல்லாஞ் சிவபத்தியுடையவர்க ளாகப்பண்ணி, ஒவ்வொரு தேசங்களினும்போய் அங்

கங்கேயுள்ளவர்களை யெல்லாம் விபூதிருத்திராக்ஷ பஞ்சாக்ஷர சிவநாமங்களிற் பத்தியுடையவர்களாக நிலைப்படுத்தியபின் பாண்டிநாட்டையடைந்து, மதுராமா நகரத்தில்வந்து, அங்கேவிளங்குந் திருமடத்திற்சார்ந்து, சந்திரகுலத்தரசனாகிய பாண்டியன் வழிபடப் பாண்டிநாட்டாசானென்னும் பெயரோடு விளங்கினார். இந்த ஈசான சிவாசாரியர் க்ஷேத்திரயாத்திரை செய்யுஞ் சமயத்திலே அகோரசிவாசாரியருக்கும் இவருக்கும் நட்புண்டாயிற்று. இந்த வீசான சிவாசாரியர் மதுரையிலிருக்கும்பொழுது, அகோர சிவாசாரியர் வணிகர்களோடுவந்தார். இவ்வாறு ஈசான சிவாசாரியருடைய வுற்பத்தியைச் சொன்னோம். முனிவர்களே பின்னிகழ்ந்தவைகளைச் சொல்லுவோம். கேளுங்கள்.

அகோரசிவாசாரியர், ஈசானசிவாசாரியருடையமுகத்தைநோக்கி, நட்புமிகுந்த வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, சோழராசாவினாலே சகித்தற்கரிய துன்பம் வணிகர்களுக்கு வந்ததையும், அந்த வணிகர்கள் இளைசைமா நகரத்தை யடைந்து வசிக்க விரும்பியதையுஞ் சொல்லி, நமது நண்பரே, நான்சிதம்பரமென்னுந்திவ்விய க்ஷேத்திரத்திலேயிருந்து என்றுஞ் சமாதிசுகமடைய நினைந்தேன். நம்முடைய சீடர்களாகிய இந்த வணிகர்களை யும்முடைய சீடர்களாகக் கொண்டருளுமென்று சொல்ல, அதுகேட்ட வீசான சிவாசாரியரும் அவ்வாறே தமக்குச் சீடர்களாகவேற்

ரூர். பின்பு ஈசானசிவாசாரியர் பாண்டியனுடைய சபைக்குச்சென்று தம்முடைய மித்திராகிய அகோர சிவாசாரியரையும் வைசியர்களையும் பாண்டியராசனுக் குத் தெரியும்படி செய்தார். உடனே பாண்டியராசன் அகோரசிவாசாரியரைத் தன்னாசாரியரைப்போலவே மதித்துப் பத்திபண்ணினன். சிவனடியார்களாகிய வணிகர்களிடத்திலே மிகுந்த நேசம் வைத்தான். பின் புவணிகர்களெல்லாந் தன்னாட்டிலுள்ள இளைசைமா நகரத்திலே யிருந்து வாழவேண்டுமென்று வந்தார்க ளென்பதை யறிந்து மகிழ்ந்து, நாமு மங்கேவருவோ மென்று வணிகர்களுக் கின்பமுண்டாகச் சொல்லி, அவர்களோடும் அகோரசிவாசாரிய ரீசானசிவாசாரிய ரோடும் இளைசைமா நகரத்துக்குப் புறப்படுகின்றான். வாகனவகைகள் விரைவில்வந்தன. முரசம் முதலியன வந்தன. பரிவாரஜனங்கள் வந்தன. ஏனைய சிறப்புக்க ளும் வந்தன வந்தபொழுது, பாண்டியராசன்ஆசாரியர் களிருவருக்கும் உரியவாகனங்கள் கொடுத்து, வைசி யர்களுக்கு மேற்றபடி கொடுத்து, தானுமேறி, மங்கல வாத்தியங்கள் முழங்கவும், பல சீர்சிறக்கவும், மதுரை யைநீங்கி வழிக்கொண்டு, இளைசைமாநகரம் வந்தடை ந்தான். பாண்டியராசன் வந்தடையும் பொழுது, திரு விழாநாளாதலால் அந்த விளைசைமாநகரம் மிகுந்த வல ங்காரத்தோடு விளங்கியது. அங்கே அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் சங்கரசாதியாமென்னு மிவர்களு

யைய கூட்டந்தானே யிருக்கும்? இருடிகள் தேவர்கள் கந்தருவர் கின்னரரென்னு மிவர்களுடைய கூட்டமு மிருக்கும். சத்தசுரங்கள் பொருந்திய இனியபாடலோசையையும் பலவாத்தியங்களோசையையும் வேதவோசையடக்கிமேலெழும். இரத்தினங்களும் இரத்தினங்களழுத்திய பொன்னுபரணங்களும் ஏனையபொருள் வர்க்கங்களும் யாரு மாசைகொள்ளும்படி விளங்குவன. மண்டபநிரைகளும் சபைகளும் விமானபந்திகளும் அழகுக்கழகாய் எதிர் செல்வோருடைய கண்களையெல்லாங் கொள்ளைகொள்ளும். வாயில்கடோறும் பல தீபம் முதலிய மங்கலப்பொருள்கள் பெருகப் பூரண கும்பம் விளங்கும். சித்திரப்பாவைகள் பலதொழில்களைச் செய்துகொண் டங்கேயிருக்கும். கொடிகளுங் குடைகளுஞ் சாமரங்களுந் தோரண நிரைகளும் நெருங்க வெவ்விடத்திலு மணிபடுக்கப்பட்டுள்ளன. வாழைகளுங் கமுகுகளும் பூந்துணர் மாலைகளோடு விளங்குவன. தசாங்கங் குங்குலியமென்னு மிவைகளாலுண்டாகுந் தூபம் எங்குங்கமழும். உண்டவர்கள் உண்டு செல்லவும், உண்ணுகின்றவர்கள் உண்ணவும், உண்ண வேண்டுபவர்களை யெதிர்பார்க்கவும் நிகழுகின்ற அன்ன சாலைகள் பல. மந்தமாருத முலாவாநின்ற தண்ணீர்ப்பந்தர்கள் பல. தடாகம் முதலியன அடைந்தோர்களுக்கு வேண்டும் பயன்களை யளிப்பனவாயிருக்கும். விழவின் மகிழ்ச்சியாற் கூத்தாடுகின்றவர்

களும், விரும்பியெழுந்துபாடுகின்றவர்களும், சிவபெரு மான் விழாக்காட்சியை யெதிர்பார்க்கின்றவர்களுமே யெங்குமிருப்பார்கள். நகரத்தலங்காரமானது அலங்கா ரஞ்செய்ய முயலுவோருக்கெல்லாம் முன்விதமாயிருக் கும். மற்றையவிடங்களி னலங்காரமெல்லாம் இதற்கு பமேயமல்லது உபமானமாக மாட்டா, எம்பெருமான் எங்களுக் கருளும் மங்கலப் பொலிவுபோல விளங்கும் இளைசைமாநகரத்தையடைந்த பாண்டியராசன், இன் றைக்கு இது வென்னென்று எங்கும் பார்த்து, அதி சயமுடையவனும், மகிழ்ந்த மனமுடையவனும், ஆசாரியரிருவரும் வணிகரும் பக்கத்தே பொருந்தச் சிரசிலே கைகளைக்கூப்பிக்கொண்டு நின்றான். நிற் கும்பொழுது, உயிர்க்குயிரானவரும் ஆறுகுணச் செல் வரும் தேவதேவருமாகிய கைலாசநாதஸ்வாமி தீர்த் தோற்சவங் கொண்டருளும் பொருட்டு எழுந்தருளு கின்றார். முரசவாத்தியமும் ஏனையவாத்தியங்களும் முழங்கவும், அன்பருக்கெளியார்வந்தார். தேவர்களுள் முதல்வர் வந்தார். இன்பத்தை யருளும் பெருமான் வந்தாரென்று பொற்சின்னங்கள் பணிமாறவும், யாழ் வாசிக்கப்படவும், உருத்திரகணிகைகள் நிருத்தஞ்செ ய்யவும், விழாத்தரிசிக்க வந்தோரெல்லாமெங்கும் நெ ருங்கி யன்போடு வழிபட்டுச் செல்லவும், அந்தணர் கள் இருக்குமுதலிய வேதங்களைநின்றோதவும், அடி யார்கள் சிவசிவ முழக்கஞ்செய்யவும், கொடிகள் நெரு

ங்கவும், சாமரங்களிரட்டவும், ஆலவட்டங்களசைய வும், வெண்குடை விளங்கவும், அன்பர்கள் வீசும் புஷ் பமாரிகள் மேலே சொரியவும், அஸ்திரதேவர் முன் னே போகவும், விநாயகக்கடவுள் வலப்புறத்துவரவும், தெய்வயானையம்மை வள்ளியம்மை யிருவரு மிருபக்க ங்களிற் பொருந்தச் சுப்பிரமணியக்கடவுளிடப்புறத்து வரவும், சண்டேசுவரர் பின்னேவரவும், இடபவாகனத் தின் மேலே கைலாசநாதஸ்வாமி நித்தியகல்யாணி யம் மையாரோடு வெளியே வந்து காட்சி கொடுத்தருளி னார். அவ்வாறு காட்சி கொடுத்தருளிய வெம்பெரு மான், அன்பர்களுக் கெல்லாம் ஆனந்த விளைவாய் வீதி வலம் வந்து, சித்த தீர்த்தத்திலே நீர்விழாக் கொண் டருளினார். அப்பொழுது சமஸ்தருஞ் சித்த தீர்த்த த்திலே யானந்தத்தோடு ஸ்நானஞ்செய்தார்கள். வைசி யர்களெல்லாம் அதனைக்கண்டெங்கள் பாக்கியமே பாக் கியமென்று மூன்றுமுறைதுணிபோடு சொல்லி, சரீர மெல்லா முரோமபுளகமுண்டாகப் பரவசராகி யான ந்த சாகரத்திலே முழுகிச் சித்ததீர்த்தத்திலே ஸ்நா னஞ் செய்தார்கள்.

இவையெல்லாம் நிகழ்ந்த பின்பு அகோரசிவா சாரியர் வைசியர்களை நோக்கி யினியவார்த்தை சொல் லுகின்றார். தேவதேவராகிய கைலாசநாதஸ்வாமியி னுடைய தரிசனத்தால் நம்முடைய பிறவி யின்றைக் கே பயன்பெற்றது. நம்முடைய தவம் இன்றைகே

பயன்பெற்றது. நம்முடைய ஞானம் இன்றைக்கே பயன்பெற்றது. வைகாசிமாசத்திலே விசாக நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணிமையிலே நடக்கு முற்சவமுடிவிலே அருள்வள்ளலாருடைய திருவருளாற் பெற்ற பாக்கியவசத்தினாலே கைலாசநாத ஸ்வாமியினுடைய வற்புத தரிசனம் பெற்றோம். மிகுந்த வருமையாகிய இளைசைமாநகரத்தையடைதலும், சித்த தீர்த்தத்திலே கைலாசநாதஸ்வாமியோடு ஸ்நானஞ்செய்தலும் பெற்றோம். இலௌகிக வைதிகங்களிலே வல்லவர்கள், ஸ்வாமியோடு தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்தல் நூறு அசுவமேதயாக பலனைத்தருமென்று சொல்லுவார்கள். இவைகளெல்லா முங்களாலே நமக்குக் கிடைத்தன வென்று சந்தோஷத்தோடு சொன்னார். வைசியர்கள் யாவரு மவைகளைக்கேட்டு மிக மகிழ்ச்சி யடைந்தார்கள். பின்பு கைலாசநாதஸ்வாமிக்குப் பூசைசெய்யக் கருதி, மிகுந்த நியமத்தோடு பூசைக்கு வேண்டு முபகரணங்களையெல்லாந் தேடிக்கொண்டு, அகோரசிவாசாரிய ரீசான சிவாசாரியரென்னு மிருவருஞ்சொல்லிய சாஸ்திரவிதிப்படி வழுவாது பூசைசெய்தார்கள் கைலாசநாதஸ்வாமி திருவருளைப்பெறுதற்குப் பெரும் பூசைசெய்த வணிகர்கள் பிராமணருக்குப் போசனஞ் செய்வித்துத் தாங்களுமுண்டார்கள். பின்னர் வைசியர்கள் சிலநாளங்கே வசித்துக்கொண்டு, ஆசாரியர் பணித்தவழியே அடசித்தர் முதலிய நவசித்தர்கள்

அன்பொடு பூசித்த வொன்பதி லிங்கங்களையும் விதிப்படி வழிபட்டு, அங்கங்கே செய்யவேண்டுந் திருப்பணிகளையுஞ் செய்துகொண்டு, சிவபெருமானுடைய திருவடியன்பு பதித்த வுள்ளமுடையவர்களாய் முறையாகவுணரு நிலையிலிருந்தார்கள்.

இவ்வாறிருந்த வைசியர்கள் யாவரு மொருங்கு கூடி உண்மை யறிவானந்த வடிவுடைய சுத்தசோதியாயும் ஏகமாயுமிருக்கும் பரமசிவத்தை யிருதய கமலத்திலே நிறுத்தித் தியானமேற்கொண்டு யோகபீடத்தில் வீற்றிருக்குஞ் சிவயோகியாகிய அகோரசிவாசாரியருடைய பாதங்கள் சிரசிற்படப் பூமியிலே தண்டாகாரமாய் விழுந்து நமஸ்காரம்பண்ணி, இதனைச் சொல்லுகின்றார்கள். மூன்று காலங்களையுமறிந்து உயிர்களுக்கு நன்மைசெய்கின்ற முதல்வரே, ஐம்புலவேடரை யடக்கிய வாசாரியரே, தேவரீராணையைத் தாங்கிநிற்கும் எங்களுக்கு இனிமேற் செய்யத்தக்கனவற்றைச் சொல்லியருளுகவென்று விண்ணப்பஞ் செய்தார்கள். அது கேட்ட வகோரசிவாசாரியர், சிவஞானஞ் சார்ந்து நன்மைசெய்யும் விருப்புடைய வணிகர்களே, இனிமேல் நிகழுவனவற்றையெல்லா மாலோசித்துச் சொல்லுகின்றோம் கேளுங்களென்று இவைகளைச் சொல்லுவார். நீங்கள் இங்கேயே நீடூழிவாழ்ந்திருங்கள். கைலாசநாதஸ்வாமியினுடைய திருவடிகளை யன்போடு நன்றாய்ப் பூசைசெய்யுங்கள். நவசித்தராற் பூசிக்கப்பட்ட

மற்றைய விலிங்கங்களையும் அங்கங்குள்ள (
தீர்த்தங்களையு மன்போடு சேவைசெய்யுங்கள்,
சிவாசாரியரைச் சிவபெருமானாக வெண்ணி யெப்போ
பொழுதும் பூசியுங்கள். அவருடைய வாணையைப்
போற்றுதலே யுங்கள் செல்வப்பெருக்கத்துக்கு முதற்
காரணமாம். இன்னும் இதினும் பார்க்கச் செல்வம்பெ
ருகும். நாமிங்கே வந்தபொழுது எல்லாம் மங்கலமாக
வே யிருந்தன. அதுபோலவே இன்னு முங்களுக்கெல்
லாமாகும். ஐயமேயில்லை. நமக்கோ இல்லறத்தில்
விருப்பமில்லை. நாம் யோகியாய் எங்கேனும் வசித்
திருப்போமென்று சொல்லி, தம்மைவணங்கிய வணி
கர்களுக்கு விபூதிகொடுத்து அநேகாசீர்வாதங்கள்
சொல்லி மகிழ்வித்துச் சிதம்பரமடைந்தார். அரசன்
மகிழப்பெற்ற செல்வவணிகர்கள் இளைசைமாநகரத்துக்
குத் தூரமல்லாத ஒரு ஸ்தானத்திலே ஈசானசிவாசாரி
யருக்கு ஓரிருக்கையை யமைத்துவைத்து, சிவஞான
மபிவிருத்தியாகும்படி யவதாரஞ்செய்த ஈசான சிவா
சாரியருடைய உபயபாதங்களைவணங்கி யன்புகொண்டு
ஸ்ரீ பஞ்சாக்ஷரோபதேசம் முதலியவற்றைப் பெற்றார்
கள். பாண்டியராசனும் மகிழ்ந்து, நவசித்தர்களாலே
பூசிக்கப்பட்ட ஒன்பது க்ஷேத்திரங்களையும் அவ்வணி
கர்கள் வசமாகச்செய்து, மதுராபுரியையடைந்து வாழ்
ந்தான். வணிகர்களெல்லாம் உடல்முதலிய மூன்றை
யுமர்ப்பித்த வன்றுதொடங்கி யீசான சிவாசாரியரு

ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு தமது செய...ல்லாம் நடத்திவந்தார்கள். தெய்வபத்தியிற் சிறந்த வுள்ளமுடைய வணிகர்கள் தங்கள் செல்வமெல்லாம் ஈசான சிவாசாரியருடைய திருவருளினாலே பூர்வ பக்ஷத்து மதியம்போல நாடோறு மோங்கிப் பொலிய வாழ்ந்திருந்தார்களென்று இந்தப் பிரகாரம் வசிஷ்டர் முதலிய முனிவர்களுக்கு அகத்தியமுனிவர் அருளிச் செய்தாரென்று சூதமகாமுனிவர் சொல்லியருள, நைமி சாரணிய வாசிகளாகிய சௌனகாதிமுனிவர்கள் மனமு வந்துகேட்டு, பௌராணி கோத்தமராகிய சூதமுனி வரைப் பூசித்தார்கள். இந்தப் புராணத்தைப் படிக் கின்றவர்களுக்குங் கேட்கின்றவர்களுக்கும் சிவபத்தி ஐசுவரியம் செல்வம் சந்தோஷம் ஆரோக்கியம் முதலியன எந்நாளும் பெருகும். இது உண்மை. பிள்ளையை விரும்பினவர்கள் பிள்ளையைப் பெறுவார்கள். பொ ருளை விரும்பினவர்கள் பொருளையடைவார்கள். புகழை விரும்பினவர்கள் புகழைச்சேர்வார்கள். கன்னிகையை விரும்பினவர்கள் கன்னிகையைச் சார்வார்கள். நோயை நீங்க விரும்பினவர்கள் அது நீங்கப்பெற்று மகிழ்ச்சியோடு வாழ்வார்கள்.

### வாழ்த்து.

அந்தணராக்கள்வாழ்கவடைவின்வான்மாரிபெய்க
நந்தவில்வளங்கண்மல்கநாட்டுநல்லரசன்செங்கோ
லுந்துகவுயிர்களெல்லாமோங்குகவறங்கள்யாவு
முந்துகசைவநீதிமுதிருகபுவனமுற்றும்.

